# செந்தமிழ்ச் செல்வி




## உள்ளுறை



சிலம்பு-௫௬ ] வள்ளுவர் ஆண்டு-௨௦௧௨, ஆவணி Sep. '81 [பரல் -

## 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ருசு | திருவள்ளுவர் ஆண்டு உ0கஉ, ஆவணி செப்டம்பர் 1981 | பரல் க |
|---|---|---|


## மணிவிழாக் காணும் கழகத்தின் மாத்தமிழ்ச் செல்வி

தமிழ்மொழியைத் தாயாகவும், தெய்வமாகவும் வழிபடுவது நம்மவர் பண்பாடு. அத் தமிழைச் செல்வியாகவும் பாவையாகவும் வளர்த்தல் நம்மவர் கடமை. இக் கடமையைக் கடைப்பிடியாகக் கொண்டு அறுபான் ஆண்டுகள் அரும்பணியாற்றி மணிவிழாக் காண்கிறது செந்தமிழ்ச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்! இம் மணிவிழா ஆண்டில், தன் ஐம்பத்து ஆறும் சிலம்பொலி எழுப்பி அணிமிகு நடையெழில் காட்டப்புகுகின்றுள் இச் செந்தமிழ்ச் செல்வி!

செந்தமிழ்ச் செல்வி கழகச் செல்வியாகப் பிறந்தாள். கன்னித் தமிழ்ச் செல்வியாக வளர்கிருள்; அவள் இதுகாறும் ஆற்றியுள்ள பணிகள் அளப்பரியன; ஆற்றவிருக்கும் பணிகளோ அதனினும் அளப்பரியன; அவள் கருதிக் கருதிச் செய்துவரும் கவின்மிகு பணிகளால் நந்தமிழ்ச் செல்வியாகவே அமைகிருள். "செழுங் கலை நியமத்து நந்தாவிளக்"காகிய அவள், "கலையமர் செல்வியாய்" "பொற்பின் செல்வியாய்", "முதிராச் செல்வியாய்", "திருவின் செல்வியாய்"—திகழ்கிருள்.

செந்தமிழ்ச் செல்வி, தமிழ்த் திங்கள் முதல் நாள்தொறும் தன் சிலம்பொலியைச் சீர்மையாக எழுப்புகிருள். அவள் சிலம்பில், "பொன்னும் துகிரும் முத்தும் மன்னிய மாமலை பயந்த காமரு மணி யும்" உள்ளிடு பரல்களாகக் கிடந்து இசையொலி எழுப்பி இன் புறுத்துகின்றன. அவ்விசையின் சீர்மையும் செம்மையும் செறிவும் நிறைவும் திங்கள் அளவில் வாழ்வு தாராமல், போற்றுவார் போற்றும் காலமெல்லாம் பொலியும் பொன்னென, நிலைத்த வாழ்வு அவளுக்குத் தருகின்றன. அட்டைக் கட்டடம் கட்டியும், பட்டுத்

துணி போர்த்தும் அழகு நிலைப் பேழையுள் வைத்துப் போற்றவும், கலைக்களஞ்சியம் எனக் காலமெல்லாம் காத்துக் கற்கவும் செய்கின்றன. ஆராய்ச்சியாளர்க்கு வித்தாய், அரும் பெரும் புதையலாய் விளங்குகின்றன. கூற்றையும் ஆடல் கொள்ளும் ஆற்றல் இது! கால வெள்ளம் கடக்கும் கவின் இது! "ஊழி ஊழி வாழும் உயர்வும்" இது! "கூற்றங் குதித்தலும் கை கூடும் நோற்றலின், ஆற்றல் தலைப்பட்டவர்க்கு" என்பதை மெய்ப்பிப்பதும் இது!

செல்வி பிறக்கும்போதே அவள் கடைப்பிடி நோக்கும், நடைத் திறப் போக்கும் வரையறுக்கப்பெற்றன. அந் நோக்கும் போக்கும் அவள் திறங்காக்கும் அரண்களாய் அமைந்தன. அன்னைத் தமிழுக்கும் அரண்களாய் அமைந்தன.

நோக்கையும் போக்கையும் வரையறுத்துவிட்டுப் புனல்சாயப் புல்சாயுமாறு போலவோ, சுழல்காற்றில் அலைசருகு போலவோ, தான்தோன்றிப் போக்கில் செல்வி சென்றது இல்லை! கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்பதோ, காலையிலே ஒரு நோக்கம், கடும்பகலில் ஒரு நோக்கம், மாலையிலே ஒரு நோக்கம், மறுநாளில் ஒரு நோக்கம் எனப் பல நிறங்காட்டிப் பறையறைதலோ செல்வி என்றும் அறியாள். அரசியல் நன்மை கருதி ஆரவாரம் காட்டாமல், அமைந்த கொள்கைப் பணியால் குலம் பேணுதல் செல்விக்கு என்றும் இயல்பாம்!

செல்வியின் முதலாண்டு நிறைவின்போது அவளை ஊட்டி வளர்ப்பித்த இதழாசிரியர் அவள் வளர்ச்சியை எண்ணி உவகை கொள்கிறார்:

"நமது செல்விக்கு, இத் திங்களுடன் ஓராண்டு முடிவு பெறுகின்றது. இத் திருமகள் சைவசித்தாந்தக் கழகமாகிய திருப்பாற் கடலிலே தோன்றிச் செந்நாப் புலவர் பொருளாகிய தீம்பால் ஊட்ட வளர்ந்து, நல்லறிஞர் கையகத்தே செய்யதாள் அழுந்தப் பொருந்திக் கண்ணையும் கருத்தையும் கவர்ந்து, இன்ப மகிழ்ச்சி எவர்க்கும் விளைத்து வந்தனள். நமது செல்வி காலத் தாழ்வு என்னும் பேய் பிடியாமலும் கைப்பொருள் இன்மை என்னும் பறவை பறவாமலும், எடுப்பார் பிடிப்பார் இலரென்னும் இலம்பாடு மேவாமலும், செழுங்குடிப் பிறந்த செல்வப் பாவையாய்ச் சிறந்து ஓராட்டைப் பருவம் உற்றனள். செல்வர் பலரும் அவளுக்கு அடியுறையாகிய அரும்பொருளை அயிர்ப்பின்றி வழங்கினர். புலவர் பலரும் தத்தம் தகுதிக்கு ஏற்பப் பிள்ளைப்பணி அணிந்து கொள்ளை மகிழ்வு கொண்டனர். செல்வியும் மழலை மொழிந்து சான்றோர் மடிமீதமர்ந்தனள். இனி இவள் ஓடி உலாவும் பருவத்தினள் ஆதலின் தனது ஒள்ளொளியை யாண்டும் பரப்புவள் என்பதற்கோர் ஐயமில்லை."

முதலாண்டில் கண்ட செல்வியின் பொலிவும் புலனும், அகவை முதிர முதிர முதிர்ந்து, ஐம்பத்தைந்தாம் அகவையுற்று அதன்மேல் 'அளப்பருந்தன்மை வளப்பெருங் காட்சி' வழங்கு வான் இதுகாலை புக்கனள்!

செல்வியின் ஐம்பத்தைந்தாண்டு அரும்பணிகளை எண்ணு வார் நெஞ்சம் வியப்புறும். அவற்றை எண்ணிக் கணக்கிடப் புகின் இயலாது சோர்வுறும்; எழுதப் புகின் அளவற விஞ்சி அகலும்! சொல்லாராய்ச்சியா, வரலாற்றுத் தொண்டா, நாடகப் பணியா, இசைப் பணியா, மொழிபெயர்ப்பாக்கமா, கலைச்சொல்லாக்கமா, தமிழ் முழக்கமா, தமிழ்க் காப்பா, அறிவியல் ஆக்கமா—செல்வி ஆயிரங் காலால் நடந்து ஆக்கம் புரிந்து வருகிருள்!

செந்தமிழ்ச் செல்வி தோன்றியிராவிடின் செந்தமிழ்-தனித் தமிழ்-தூயதமிழ் என்னும் உணர்வு உண்டாகியிருக்குமோ? தவத் திரு மறைமலையடிகளார் தனித்தமிழ்க் கொள்கை ஊற்றம் பெற்றிருக் குமோ? அவர் வழி வந்த மொழிஞாயிறு பாவாணர் முதறிவுக் கருவூ லங்களைக் கன்னித் தமிழ் உலகம் கண்டிருக்குமோ? தமிழ், தமிழினம், தமிழ்நாடு, தமிழ்ச் சமயம் என்னும் நான்மணி மாடத் தின் நலம் புலப்பட்டிருக்குமோ? இல்லை! இல்லையன்றே!

இத்தகைய எழிற் செல்விக்குத் தமிழறிந்தோர், தமிழாய் வோர், தமிழன்பர், தமிழ்ச்செல்வர், தமிழ்த் துறையர், தமிழ் மடங் கள், தமிழக அரசு செய்யத்தக்க கடமை என்ன? அவள் செய்து வரும் அளப்பரும் நலங்களுக்குச் செய்ய வேண்டிய கைம்மாற்று என்ன? அவள் முதல் அடிவைத்த முன்னை நாளிலே அவளுக் காக வேண்டிய வேண்டுதல் என்ன?

"செந்தமிழ்ச் செல்வியைச் சிறப்புற வளர்த்தல் தமிழ்மக்கள் எல்லோரையும் பொறுத்த தலையாய கடமையாம். 'முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னுல் முடியும்' என்னும் தித்திக்கும் திருக்கோவையார் உளதாதலின் பொருட்பால் சுரந்தூட்டும் செவிலித்தாயர் பலர் வேண்டும். செல்வி பாலுண்டு உடலுரம் பெற்று வளரத் தமிழரசரும், தமிழ்ச் செல்வரும், தமிழ் மடாதிபதி களும் ஏனைய தமிழ்ப்பெருமக்களும் முன்வருவாரயின் அரும்பெரும் புலவர் பலர் அவளுக்குப் புத்தாடை புனைவர்; அணிபல அணி குவர்; கண்டோர் கண்ணும் நெஞ்சும் கட்டுண்ணுமாறு நமது செல்வி கவின் கனிந்து இலங்குவள்".

ஐம்பத்தைந்து ஆண்டுகளின் முன்னே அவள் பொருட்டாக வேண்டிய வேண்டுதலைத் தமிழ்மக்கள் இந்நாளிலேனும் நிறை வேற்றுதல் தலையாய தகவுடைய கடமையாம்! வாழிய செந்தமிழ்ச் செல்வி!

—இரா. இளங்குமரன்

# சங்க நூல்களில் ஓந்தி

## (Blood-Sucker in Sangam literature)

[திரு. பி. எல். சாமி, ஐ. ஏ. எசு.]

சங்க நூல்களில் கூறப்பட்டுள்ள ஊர்வனவற்றில் (Reptiles) ஓதி எனப்படும் ஓணானும் ஒன்றாகும். சங்க நூல்களில் ஓந்தியைப் பற்றிச் சில இயற்கைச் செய்திகள் கூறப்பட்டுள்ளன.

"கானம் வெம்பிய வறங்கூர் கடத்திடை
வேனில் ஓதி நிறம்பெயர் முதுபோத்துப்
பாண்யாழ் கடைய வாங்கிப் பாங்கர்
நெடுவிலை யாஅம் ஏறுந் தொழில"　　—நற்றிணை. 186

"வேனில் ஓதிப் பாடுநடை வழலை
வரிமரல் நுகும்பின் வாடி அவண
வறன்பொருந்து குன்றத்து உச்சிக் கவாஅன்
வேட்டச் சிறுர் அகன்கண் தேணிப்"　　—நற்றிணை. 92

"வேதின வெரிநி னோதி முதுபோத்
தாறுசென் மாக்கள் புட்கொளப் பொருந்தும்
சுரனே சென்றனர் காதல ரானழிந்து"　—குறுந்தொகை. 140

"ஈர்ங்கா முன்ன வரும்புமுதி ரீங்கை
யாவி யன்ன வால்வீ தாஅய்
வைவா லோதி மையண லேய்ப்பத்
தா துறு குவளைப் போதுபிணி யவிழப்"　　அகம். 125

"வேர்முழு துலறி நின்ற புழற்கால்
தேர்மணி யிசையிற் சிள்வீ டார்க்கும்
வற்றன் மரத்த பொற்றலை யோதி
வெயிற்கவி னிழந்த வைப்பிற் பையுள்கொள
நுண்ணிதி னிவக்கும் வெண்ணுமை வியன்காட்
டாளி லத்தத் தளிய ளவனொடு."　　—அகம். 145

ஒந்திக்குக் கழுத்திலும் முதுகிலும் கூரிய செதில்களுண்டு. "வேதின வெரிநி னோதி முதுபோத்து" என்று குறுந்தொகை கூறியுள்ளது பொருத்தமானதாகும். கருக்கரிவாளைப் போல ஒந்தியின் முதுகு இருப்பதாகக் கூறியது பொருத்தமான உவமையாகும். தாதுடைய குவளைப் போது அவிழ்ந்ததுபோல ஒந்தியின்

'மையணல்' இருந்ததாக அகநானூறு கூறியுள்ளது அரிய அழகிய உவமையாகும். நன்கு வளர்ந்த ஆண் ஓந்திக்கு முட்செதில்கள் உள்ள பிடரி உண்டு. (Mane of spine very well marked in adult males. Scales keeled and rough) ஓந்திக்குக் கறுத்த மேல் தாடி இருப்பதையும் அதில் மஞ்சள் முதலிய நிறங்கள் கலந்திருப்பதையும் கண்டுதான் தாது நிரம்பிய குவளை மொட்டு கட்டவிழ்ந்தது போலக் காணப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது. நற்றிணையில் இரு பாடல்களிலும் அகநானூற்றில் ஒரு பாடலிலும் வேனிலில் ஓதி காணப்பட்டதாகக் கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும். ஓத்திகளைப் பெரும்பாலும் வேனிற்காலத்திலேயே நிறங்களுடன் கண்டுள்ளேன். ஆதலின் வேனில் ஓதி என்று கூறியது சரியான செய்தியாகும். ஓதியை 'வறங்கூர் கடத்திடையும்', 'வறன் பொருந்து குன்றத்திலும்', சுரனிலும் கண்டு கூறியது பொருத்தமே. 'வற்றல் மரத்த பொற்றலை ஓதி' என்று அகநானூறு கூறியுள்ளது. பொன்னிற ஒந்தியின் தலை அடிக்கடி நிறம் மாறுவதையும் கண்டுள்ளேன். (The colour is changeable often and the make head often blushes red, whence the name blood-sucker)

பொன்தலை என்று கூறப்பட்டுள்ளதன் காரணம் ஓந்தியின் தலை அடிக்கடி சிவப்பு நிறமாக மாறுவதாலாகும். ஓந்தியின் பொது நிறம் கறும்பழுப்பு நிறம் ஆகும். உடலில் கரிய கோடுகள் காணப் படும்; ஓந்தி உடல் நிறத்தை மாற்றக்கூடும் தன்மையுடையது. சூழலுக்கேற்ப நிறத்தை மாற்றி மறைத்துக் கொள்ளும். நற்றிணை 186ஆம் பாட்டில் 'வேனில் ஓதி நிறம்பெயர் முது போத்து' என்று கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். ஓந்தி நிறம் பெயர்வது, அதிலும் ஆண் ஒந்தி நிறத்தை மாற்றுவது இயற்கையில் உண்மையானதாகும். நிறம்பெயர் முதுபோத்து என்று கூறியுள்ளதால் அது பச்சோந்தியாக இருக்கலாமா என்று ஐயுறலாம். ஆனால் பச்சோந்தி கானம் வெம்பிய கடத்திடை இயற்கையில் வாழ்வதில்லை. ஆதலின் நிறம்பெயர் முதுபோத்து பசுமையான சூழ்நிலையில் வாழும் பச்சோந்தியாக இருத்தல் முடியாது.

நற்றிணையில் (92) "வேனில் ஓதிப் பாடுநடை வழலை வரிமரல் நுகும்பின் வாடி அவண" என்ற வரி காணப்படுகின்றது. வருந்திய நடையுடைய ஒந்தியாகிய வழலை தன் துணையோடு வரிகளையுடைய இளமடல் போல வாட்டமுற்று என்று உரை யாசிரியர் பின்னத்தூரார் உரை கூறியுள்ளார். ஆனால் இந்த உரை நேரியதாகவோ, பொருத்தமானதாகவோ இல்லை. வேனில் ஓதி வேறு; பாடுநடை வழலை வேறு. வழலை என்ற சொல்

ஒருவகைப்பட்ட பாம்பையே குறிக்கும். 'வழலை—ஒருவகைப் பாம்பு, அதனைப் போறலின் ஓந்தி வழலை என்றார் போலும்' என்று உரையெழுதியுள்ளார். ஆனால் ஓந்தியானது வழலைப்பாம்பு போல தோற்றமுடையதில்லை. ஓந்தியைப் போல வழலைப்பாம்பு நிறத்தை மாற்றக்கூடியதல்ல. உரையாசிரியர் கூறியபொருள்படி கொண்டால் 'வழலை ஓந்தி' என்றுதான் பெயர் இருக்க வேண்டும். பாடுநடை வழலை என்ற பெயர் உரத்த ஒலியை எழுப்பும் நடையுடைய வழலைப்பாம்பு என்ற பொருளுடையதாகும். அத்தகைய பாம்பை இக்காலத்தில் சுருட்டைப் பாம்பு, சுருட்டை விரியன் என்று அழைப்பர். இந்தப் பாம்பிற்குத்தான் 'வரிமரல் நுகும்பு போல்' வரியுடைய உடல் உள்ளது. மரல் என்பது ஒரு பூண்டு. இதை இக்காலத்துப் பேச்சு வழக்கில் 'மருள்' என்றழைக்கின்றனர். இதன் மடலைச் சுட்டுச் சாற்றைக் காதில் ஊற்றினால் காது நோய் குணமாகும் என்று நாட்டார் மக்கள் கூறுவர். இதன் மடல் உருண்டு திரண்டு வரிகளுடன் சுருட்டைப்பாம்புபோல இருப்பதை நான் நேரில் பார்த்திருக்கிறேன். இது சிறிய பாம்பாயினும் கொஞ்சம் நஞ்சுடையது. இந்தப் பாம்பு கடுமையான வெயிலிலும் கற்பாறைகளிலும் காணப்படும். அதனால்தான் இந்தப் பாம்பு 'வறன்பொருந்து குன்றத்து உச்சிக் கவா அனில்' காணப்பட்டதாக நற்றிணையில் கூறப்பட்டுள்ளது. இஃது ஓர் அரிய அறிவியல் செய்தியாகும். வெயில் காயும் கற்பாறைகளில் காணப்படும் என்று கூறியுள்ள செய்தியையே நற்றிணையும் கூறியுள்ளது.

இந்தப் பாம்பு வடநாட்டில் மட்டும் வறட்சியான பகுதியில் வாழ்வதாகக் கூறுவர். இந்தச் செய்தி தவறு; தமிழ்நாட்டிலும் வறட்சியான பகுதிகளில் சுருட்டை விரியனைக் காணலாம். இந்தப் பாம்பை நான் முதலில் பனைமரத்தில் கண்டேன். நானும் என் நண்பனும் திண்டிவனத்தில் ஒரு பனைமரத்தில் ஏறும்போது சுருட்டைப் பாம்பு என் நண்பனைக் கடித்துவிட்டது. உடனே மருந்து கொடுக்கப்பட்டுக் குணமாக்கப்பட்டான். திருநெல்வேலி மாவட்டத்தில் பனங்காடுகளில் இந்தப்பாம்பு காணப்படுகிறது. இந்தப் பாம்பு அடிவயிற்றுச் செதில்களால் ஓசை செய்துகொண்டு செல்லும். ஆதலின் 'பாடுநடை வழலை' என்றழைக்கப்பட்டது. "வேனில் ஓதிப் பாடுநடை வழலை" என்று வரும் வரிக்குப் பொருளாக வேனிற் காலத்து ஓந்தியும் பாடுநடை வழலையும் வரிமரல் நுகும்பு போல வாடினதாகப் பொருள் கூறவேண்டும்.

குறுந்தொகை 140ஆம் பாட்டில் 'ஆண்ஓந்தி வழியே செல்லும் மாந்தர்கள் நிமித்தமாக கொள்ளும்படி பொருந்தியிருந்த பாலை நிலம்' என்று கூறப்பட்டுள்ளது. நான் உயர்நிலைப்பள்ளி மாணவனாக இருந்தபோது மரத்தைச் சுற்றிக்கொண்டு ஓணா

வேறுமரத்திற்கு தாவாதபடி அடிக்கும் கேளிக்கையில் ஈடுபட்டேன். ‘இளமையிற் கல்’ என்ற முதுமொழிப்படி இளமையில் கற்றதொடு கல்லெடுத்து ஓணனை அடிக்கும் பழக்கமும் உடையவனாக இருந்தேன்! புள் நிமித்தம் என்பது ஒரு நம்பிக்கையாகும். நான் பள்ளி மாணவனாக இருந்தபோது ஓணன் தலையை உயர்த்தியும் தாழ்த்தியும் அடிக்கடி நிகழ்த்தும் செயலைக் கண்டுள்ளேன். மெக்காவிலிருந்து மெதினாவிற்குத் துன்புறுத்தலால் ஓடிச்சென்ற நபிகள் நாயகம் முகம்மதுவை ஓணன் தலையைத் தூக்கிச் சுட்டிக் காட்டிக் கொடுத்ததாகவும், அதனால் மகம்மதியர் ஓணன்களை வெறுத்ததாகவும் மாணவப் பருவத்தில் கேள்விப்பட்டேன். இந்தச் செவி வழிச் செய்தி எப்படி வந்தது என்பது தெரியவில்லை. சங்க காலத்தில் கூறிய செய்தியை ஒத்து ஓந்தி ஒரு நன்னிமித்தம் பார்த்தற்குரிய உயிர் என்பதைப் பிற்கால நூலாகிய அறப்பளீசுர சதகமும் கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும். “நாவிச்சிச் சிலியோந்தி தான்...வலமாயின் வழிப்பயணமாகை நன்றாகும்” என்று மிகப் பிற்கால அறப்பளீசுர சதகம் கூறுவதுபோல் ஓந்தியின் இயக்கமும் சங்ககாலத்திலேயே நிமித்தமாகக் கொள்ளப்பட்டது தெரிகின்றது. புள் என்ற சொல்லுக்கு நிமித்தம் என்ற பொருள் குறுந்தொகை உரையில் கூறப்பட்டுள்ளது.

ஓந்தியைக் குமரி மாவட்டத்தில், ஓந்தான் என்று கூறுவர். அதில் சிறியதைத் ‘தெண்டல்’ என்று கூறுவர். தெண்டல்களைச் சிறுவர்கள் துன்புறுத்துவது வழக்கம். ஆண் குழந்தை பிறந்தால் தன்னைத் துன்புறுத்துவான் என்று தெண்டல் முட்டைகளைப் பொறுக்கி ஒற்றையடிப் பாதைகளில் வைக்கும் என்பது குமரி மாவட்டத்தில் நிலவும் நம்பிக்கையாகும். இந்தக் குமரி மாவட்டச் செய்திகளை எனக்கு நண்பர் பெரியநாடார் அவர்கள் தெரிவித்தார்.

ஓந்தியென்பது ஓதியென இடைக் குறைந்து வந்தது என்று இலக்கண நூல்கள் கூறுகின்றன. தொல்காப்பிய எச்சவியலுக்கு உரையெழுதிய நச்சினார்க்கினியரும் நன்னூலுக்கு உரையெழுதிய மயிலைநாதரும் ஓதியென இடைக்குறைந்து வந்தது என்றுகூறினர். இலக்கண விளக்கம் என்ற நூலில் ஓதியென்ற குறிப்பாற் பொருளை விளக்குஞ்சொல் (இ.வி. 170) என்று கூறியுள்ளதைக் காணலாம். ஆனால் நற்றிணை 92ஆம் பாட்டிற்கு உரையெழுதிய பின்னத்தூரார் “ஓதி—ஓந்திக்கொரு பெயர்” என்று விளக்கம் கூறி “இடைக் குறை விகாரமன்று; குறைக்க வேண்டாத வழியும் இங்ஙனம் வருதலின்” என்று கூறியுள்ளார். சங்க நூல்களில் ஓந்தியென்ற பெயர் காணப்படவில்லை. ஓதி என்ற பெயரே பயில்கின்றது.

ஆதலின் ஓதி என்ற பெயர் இடைக்குறை விகாரமன்று என்று பின்னத்தூரார் கூறுவது சரிதான் என்று நான் கருதுகின்றேன். ஒந்தி என்ற பெயர் பிற்கால வழக்காகும். ஓந்தி என்ற பெயரே பிற்காலப் பெயராக இருப்பதால் அதற்கு முற்காலச் சங்ககாலப் பெயரான ஓதி என்பது ஓந்தியின் இடைக்குறைப் பெயர் என்று கருதியது தவருக இருக்கலாம். ஓந்தியை இக்காலத்தில் ஓணுன் என்று பரவலாக அழைப்பர். ஓந்தியின் உடல் ஒடுங்கிக் காணப் படுவதால் 'உடக்கான்' என்று கொங்கு நாட்டில் அழைப்பர்.

ஓந்தியை ஆங்கிலத்தில் Blood-Sucker என்றும் அறிவியலில் Colotes versi colour என்றும் அழைப்பர். அறிவியற் பெயரில் ஓந்தியின் நிறப் பெயரும் தன்மையும் குறிக்கப்பட்டுள்ளது.

கருவி நூல் :

1. Mammalia of India—Frank Finn
Thacker Spinck and Co., Calcutta.

———

## உண்மையை உணர்ந்து உரைக்கின்றேன்

ஒரு நாட்டின் நிலையான செல்வம், அந் நாட்டின் அரசியல் வாதிகள் அல்லர். உண்மையை உணர்ந்தவன் என்ற முறையில் தெரிவிக்கின்றேன், கல்வித்துறையில் ஈடுபட்டிருப்பவர்கள்—பொறியியலாளர்கள்—நிறுவனங்களை நடத்தும் திறம்படைத்தவர்கள் ஆகியோரே அழியாத நிலையான நாட்டின் செல்வம் ஆவார்கள். அத்தகைய செல்வம் நம் நாட்டில் போதுமான அளவில் இல்லாமையினுல்தான் அயல் நாடுகளிலிருந்து திறமையாளர்களையும், அறிவியல் வல்லுநர்களையும் தருவிக்கின்ருேம்.

—பேரறிஞர் அண்ணு

# காப்பிய ஒப்பீடு

[செஞ்சொற்கொண்டல், தமிழாகரர், முனைவர், சொ. சிங்காரவேலன்
அ. வ. அ. கல்லூரி, மாயூரம்.]

பழங்கதை விரிவு :

காப்பியங்கள் விரிவாக ஆக்கப்படுகின்றன என்பது தமிழ் மொழிக்கு மட்டுமன்று; எல்லா மொழிகளுக்கும் உள்ள இயல்பே ஆகும். நெடுங்கதை ஒன்றை எடுத்துக்கொண்டு அதைப் பல்வேறு எடுத்துக்காட்டுகளாலும், கிளைக் கதைகளாலும் அழகு படுத்திப் புனைகின்றது காப்பியம். காப்பியத்தின் கதை பெரும் பாலும் எல்லா மொழிகளிலுமே பழங்கதை ஒன்ருகவே அமை கின்றது.

உண்மைகள் உரைத்தல் :

தமிழ் இலக்கணம் நூலின் பயன்களாக அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கையும் குறிப்பிடும். (நன்னூல் - நூற்பா 10) இந்த நான்கினையும் குறிப்பிடும் நூல் பெருங்காப்பியம் என்றும், வீட்டினைக் குறிப்பிடாமல் ஏனைய மூன்றையும் சுட்டுவது சிறுகாப்பியம் என்றும் தமிழ் இலக்கணம் வேறுபடுத்தியுள்ளது. தமிழ்க் காப்பியங்கள் இவ்விரு வகையிலும் அமைந்துள்ளன. காப்பியக் கவிதை இயல்புகளை நோக்கினல், அவை மனித சமுதாயத்திற்கு நல்கியுள்ள பேருண்மைகளை மறக்கவியலாது, ஒப்பற்ற பண்புகள் பலவற்றை உலகிற்கு வழங்கியுள்ள இராம காதையும், பத்திச் சுவை சொட்ட மாமனிதர்கள் வரலாறுகளை எடுத்துரைக்கின்ற பெரியபுராணமும், வேலின் வெற்றியை விழுமிய நடையில் உலகிற்கு விரித்துரைக்கும் கந்தபுராணமும், போன்ற காப்பியங்கள் தமிழ் இலக்கிய வரலாற்றில் இறவாப் புகழ் கொண்டவை.

மெய்ம்மை நல்கல் :

'கவிதை என்பதே உண்மையை இன்பத்துடன் ஒன்று படுத்தும் கலை' என்பர் அறிஞர். அவ்வாறு ஒன்றுபடுத்தும் கலை அறிவும் கற்பனையும் துணையாக நிகழ்கின்றது என்று கூறலாம். 'காப்பியக் கவிதையோ இன்றியமையாத மெய்ம்மைகளை உலகிற்குக் கற்பிக்க எழுகின்றது; ஒரு பெருநிகழ்ச்சியை (great event) எடுத்துக்கொண்டு அதனைப் பெரிதும் உளங்கவர் முறையில் எடுத்துரைக்கின்றது என்கிருர் ஆங்கிலப் பெரும்புலவர் சான்சன் என்பார் :

[“Poetry is the art of uniting pleasure with truth, by Calling imagination to the help of reason. Epic Poetry undertakes to teach the important truths by the most pleasing precept and therefore relates some great event in the most affecting manner.”—Samuel Johnson “*Milton*” Milton Criticism, James Theorpe (Ed) London (1956) p. 71].

சீரிய நிகழ்ச்சிப் பாடுபொருள் அமைப்பு :

காப்பியத்திற்குப் பாடுபொருள் எல்லா மொழிகளிலும் எளியதொரு பொருளாக இருப்பதில்லை; பெறலரும் பொருளோ பெரிதும் குறிப்பிடத்தக்க அரும்பொருளோதான் காப்பியத்திற்குப் பாடுபொருளாக அமைகின்றது - அமைய முடியும். [“The Subject of an epic poem is naturally an event of great important”—Ibid. p. 72]. இராவண வதம் சூரபன்பன் வதம் முதலிய சிறப்பு நிகழ்ச்சிகளை நோக்கியே காப்பியங்கள் திகழ்தலை அனைவரும் அறிவர்.

யாப்பமைதிப் பாங்கு :

காப்பிய ஆசிரியர்கள் கையாளுகின்ற யாப்புங்கூட ஒரு வகையில், அவாகளது பாடுபொருளுக்குத் துணை செய்கின்றது என்று கூறலாம். கதை கூறுவதற்கு ஏற்ற யாப்பினையே அவர்கள் மேற்கொள்கின்றனர். பழைய யாப்பாகிய நான்கு வகைகளில் ஒன்றை அப்படியே மேற்கொள்ளாமல், கம்பர், ஓசை வேறுபாடுகளையும், உணர்ச்சி விகற்பங்களையும், எடுத்து உணர்த்தற்கு ஏற்ற வகையில், வடமொழிச் சார்பால் வந்து புகுந்த விருத்தங்களைத் துணிவாக எடுத்துக்கொண்ட திறன் நோக்கற்குரியது. இவ்வாறே மில்டன் தம்முடைய துறக்க நீக்கப் பெருங்காப்பியத்திற்கு எளிய பாவகையையே—இயல்பான செய்யுள்வகையையே எடுத்துக் கொண்ட திறம் எண்ணுந்தொறும் மகிழ்தற்குரியது ; காப்பிய ஒப்பீட்டாய்வில் கழிபேருவகை நல்குவது. சர் வால்டர் அலெக்சாண்டர் ரலே, மில்டனுடைய நடை குறித்த தம் ஆய்வுக் கட்டுரையில், மில்டன் தம்முடைய நீண்ட கவிதைக்கு இவ்வாறு எளிய இயல்பான பாவகையைத் துணிந்து எடுத்துக்கொண்ட திறத்தைப் பாராட்டுவது இங்கு ஒப்பிட்டுணர்தற்குரியது :

[“His Courage and originality are witnessed also by the metre that he chose for his poem. To us blank verse seems the natural metre for a long and serious poem”—Milton criticism. p. 115].

**கம்பர் காப்பிய அமைப்பு:**

வடமொழி வால்மீகத்தைப் பின்பற்றித் தம் பாடுபொருளைக் கவியரசர் கம்பர் அமைத்துக்கொண்டாரேனும், தமிழகப் பண்பாடும் சிறப்பும் தோன்றப் பல இடங்களில் மூலநூலினின்றும் வேறுபட்டு நிற்பதை அனைவரும் அறிவர். மனிதப் பண்புகள் பலவும் நிறைந்த மாமனிதனாக இராமபிரானைக் கம்பர் காப்பியம் காட்டுகின்றது; தெய்வமாக இராமபிரானைக் காட்டினால், மனித சமுதாயத்திற்கு அவ்வளவு நெருக்கம் உண்டாகாது என்று கருதியே கவியரசர் இவ்வாறு செய்திருக்கக் கூடும். ஆம்; சமுதாய நோக்கிற்குத்தக்க காப்பியங்கள் எழுதுவதே அவற்றின் நிலைபேற்றிற்கு அடிப்படை அன்றோ?

**மானிடத்தின் வெற்றி:**

கிட்கிந்தைக் காண்டத்தில், இராமபிரானைச் சுக்கிரீவன் முதன்முதற் கண்டதும் நினைக்கின்ற நினைப்பைக் கவியரசர் கம்பன் எடுத்துரைக்கும் இடம் இராமகதைப் பாடுபொருளின் பெற்றியை இனிது உரைக்கின்றது:

> ''ஆறுகொள் சடிலத் தானும்
> அயனும்என் றிவர்க ளாதி
> வேறுள குழுவை யெல்லாம்
> மானுடம் வென்ற தன்றே''
>
> (கிட்கிந்தா – நட்புக் கோட்படலம் 19)

மானுடத்தின் வெற்றியைப் பாடுவதே இராமகதைக் காப்பிய அடிப்படை என்று உணரவைக்கின்றது இவ்விடத்துக் கவியரசர் திருவாக்கு.

**மாமனிதப் பண்புகள் சுட்டல்:**

இராவணனிடம் அனுமன் இராமபிரானைக் குறித்துக் கூறுகின்றான். உயர்ந்த பண்புகள் பலவும் வாய்ந்த ஒரு மாமனிதன் (Ideal man) ஆகவே இராமன் திகழ்வதைக் காட்டுகின்றான்; இராமன் மானிடயாக்கை கொண்ட, 'கை வில் ஏந்திச் சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து, தொல்லை ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டு அயோத்தி வந்தவன்' என்று உண்மை சுட்டுகின்றான்.

> ''அறந்தலை நிறுத்தி, வேதம்
> அருள்சுரந் தறைந்த நீதித்
> திறம்தெரிந் துலகம் பூணச்
> செந்நெறி செலுத்தித் தீயோர்

இறந்துக நூறித் தக்கோர்
இடர்துடைத் தேக ஈண்டு
பிறந்தனன் தன்பொற் பாதம்
ஏத்துவார் பிறப்ப றுப்பான்''
(சுந்தர—பிணி வீட்டு படலம் 76)

ஏற்றத் தாழ்வு காணுச் சமநிலே வேட்கை :

மனித சமுதாயத்தில் நிலவும் ஏற்றத் தாழ்வுகளே மாமனிதனுகிய இராமபிரான் மதியாத பெற்றியைக் கவித்திறன் தோன்றக் கம்பர் சுட்டுமிடங்கள், இக் காப்பியத்தின் பாவிகப் பண்புகள் விளங்கும் இடங்கள் எனலாம். குகனேத் தன் உடன்பிறப்பாக்கிக் கொள்கின்ருன் கருணைக் கடலாகிய இராமன். (''என்னுயிர் அனையாய் ! நீ இளவல் உன் இளையான் ; இந் நன்னுதல் அவள் நின்கேள் ; —அயோத்தியா— கங்கைப்படலம் 68) ''நான்கு உடன் பிறப்பாளராகிய நாங்கள் இனி ஐவராகிவிட்டோம் என்று அன்புரை கூறிப் பாராட்டுகின்ருன். (''முன்புளோம் ஒரு நால்வேம் ; முடிவுளது என உன்னு, அன்புள இனி நாமோர் ஐவர்கள் உளராஞேம்'' —அயோத்தியா—கங்கைப் படலம் 69) குரக்கின வேந்தன் சுக்கிரீவனேயும் அரக்கர்குல அண்ணல் வீடணனேயும் கூட உடன்பிறப்பாக்கிக்கொள்ளும் பாங்கில் இந்தப் பண்புகள் இமயக் கொடுமுடிபோல இணையற்று நிற்கின்றன. பின்வரும் கம்பர் திருவாக்கு இப் பண்பினே விளக்கும் எடுத்துக் காட்டாகத் திகழ்கின்றது :

''குகனொடும் ஐவ ரானேம் முன்பு,பின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவ ரானேம் ; எம்முழை அன்பின் வந்த
அகனமர் காதல் ஐய! ; நின்னொடும் எழுவ ரானேம் ;
புகலருங் கானம் தந்து புதல்வராற் பொலிந்தான் உந்தை.''
(யுத்த—வீடணன் அடைக்கலப்படலம் 146)

ஒப்பீட்டாய்வு நெறி :

உலகமெல்லாம் ஒரு குலமாக உயர வேண்டும் என்று அருளாளர் பலரும் இன்று எழுதியும் பேசியும் வரும் கோட்பாடு, கவியரசர் கம்பர் காப்பியத்திலேயே முளேவிட்டுள்ளமையைக் காணலாம். சிறந்த காப்பியங்கள் ஒவ்வொன்றிலும் உள்ள தனி இயல்புகளே ஒப்பிட்டுப் பார்க்கும் ஒப்பாய்வு (comparative study) பெருகினுல் இத்தகைய நெறிகள் பலவற்றைப் பகுத்துணர முடியும். காப்பியங்களின் பேருண்மைகள் அழியாப்புகழ் பெற்று விளங்குவதை எம்மொழியிலும் காணக்கூடும். அத்தகைய கூரிய ஆய்வு நோக்கு அறிவுலகிடை பெருகிச் செழிக்க வேண்டும். அவ்விலக்கியப் பயனே அனைவரும் நுகரவேண்டும் என்பதே இக்கட்டுரையாசிரியனின் நோக்கு, நம்பிக்கை.

———

# ஆரியர்கள்

[க. சி. கமலையா]

எவ்வாறு திராவிடர்களைப்பற்றித் தெரிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாததோ அவ்வாறே ஆரியர்களைப்பற்றியும் தெரிந்துகொள்ள வேண்டும். இந்திய வரலாற்றில் ஆரியர்கள் அடிச்சுவடு ஆழமாகப் பதிந்துள்ளது. ஆரியர்களைப்பற்றிய விவரங்களை வேதங்களிலிருந்து தெரிந்துகொள்ள முடியும். இந்தியாவின் வடமேற்குப் பகுதியின் வழியாக வந்த ஆரியர்கள் உடலுறுதியும் உரமும் கொண்டவர்கள்; கபடமில்லாதவர்கள்; புது இடங்களை நாடியும் மேய்ச்சல் தரைகளைத் தேடியும் அஞ்சாது சென்ற இனத்தவர். பாரசீகத்தில் அவர்களின் ஒரு பகுதியினர் தங்கிவிட்டனர். ஜெண்ட் மொழியும் ஜொராஸ்டர் விரிவு படுத்திய ஜொராஸ்டர் மதமும் பாரசீகத்தில் தங்கிவிட்டன. இந்தியாவுக்குள் வந்தவர்கள் தங்களை 'ஆர்ய' என்று சொல்லிக் கொண்டனர். 'ஆர்ய' என்பதற்கு உறவினர் என்பது பொருளாகும். இந்தியாவுக்கு வந்தவர்கள் தொடக்கத்தில் சிந்து நதியையொட்டி வாழ்ந்தார்கள். அவர்கள் வந்தபோது இந்தியாவில் வாழ்ந்த மக்களை 'தாச' என்றும் 'தாசுயூ' என்றும் லிங்க வழிபாடு செய்பவர்களென்றும் குறிப்பிட்டார்கள். ஆரியர்கள் கால்நடைகளையும் சிறப்பாகக் குதிரைகளையும் வைத்திருந்தார்கள். ஆரியர்களில் வீட்டுக்குத் தலைவன் தந்தை. அவர்கள் பெண்ணுக்கு உயர்ந்த இடம் அளித்தார்கள். திருமணமானபின் மனைவியாயும் தாயாயும் வீட்டை நடத்தும் பெண் கணவனுடைய அன்றாட வேலைகளில் பங்கு கொண்டாள். கணவனை இழந்த மனைவி உடன் கட்டை ஏறுவதென்பதற்கு ரிக்வேதத்தில் எவ்வகை ஆதாரமும் இல்லை. பெண்கள் வேதங்களைக் கேட்பதினின்றும் தடுக்கப்படவில்லை. ஆபாலா என்றவளும் கோஷா என்ற தொழு நோயால் பீடிக்கப்பட்ட பெண்ணும் இயற்றிய பாடல்கள் ரிக்வேதத்தில் உள. தேர்களை ஓட்டுவதில் ஆரியர்கள் திறமை பெற்றிருந்தார்கள். 'சோம' என்ற ஒருவகைச் செடியிலிருந்து மது இறக்கி அதைக் குடித்துக் களித்தார்கள். அச் செடியைப் போற்றிப் பாடிய பாடல்கள் வேதங்களில் உள. ஆரியர்கள் சூதாடுவதில் விருப்பம் கொண்டவர்கள். உண்மைக்கும் ஒழுங்கான நடத்தைக்கும் அன்புக்கும் துணிவுக்கும் உற்றாரிடம் காட்டும் பாசத்துக்கும் பேர் பெற்றவர்கள். பொய் பேசுதல், ஏமாற்றுதல், காட்டிக் கொடுத்தல் ஆகிய தீக்குணங்களை அவர்கள் வெறுத்தார்கள். உலக

வரலாற்றில், மக்களுடைய சிந்தனை சக்தியை வேதங்களின் பாடல்கள் பெரிதும் ஈர்த்தன. வேதங்களில் சொல்லப்பட்ட முறைகள் இன்றும் இந்தியாவின் பல பகுதிகளிலும் பரவிக் கிடக்கும் பிராமணர்களால் கையாளப்பட்டு வருகின்றன. எனவே வேதங்கள்பற்றியும் ஆரியர்கள்பற்றியும் தெரிந்துகொள்ள வேண்டிய தேவை தவிர்க்க முடியாதது.

வடமொழியிலுள்ள இந்துக்களின் சமய நூல்கள் இரு பிரிவுகளிலடங்கும்—(1) சுருதி; (2) ஸ்மிருதி. சுருதி என்பது கேட்கப் படுவதாகும்; காலத்தால் அளக்கப்படாதது; ரிஷிகளுக்கு உணர்த்தப்பட்டு அவர்களால் மாணாக்கர்களுக்குச் சொல்லப் பட்டது; அவர்களால் இயற்றப்பட்டவையோ தொகுக்கப்பட்டவையோ அல்ல. ஸ்மிருதி என்பது மனப்பாடம் செய்துகொள்வது என்பதாகும். ஆண், பெண் தெய்வங்களைப்பற்றி விவரிக்கும் பதினெண் புராணங்களும் உபபுராணங்களும், சமூக விதிமுறைகளைச் சொல்லும் ஸ்மார்த்த அல்லது கிருஹ்ய சூத்திரங்களும், தர்ம சாஸ்திரங்களும், மனுநீதியும், ஆறு வேதாங்கங்களும் இராமாயணமும் மகாபாரதமும் அதனுள்ளடங்கும். வித் (அறி) என்ற வேர்ச்சொல்லிலிருந்து வேதம் என்ற சொல் பிறந்தது. வேதங்களில் தலையாயது ரிக்வேதம்.

நான்கு வேதங்களும் இரு பிரிவுகளிலடங்கும். முதற் பிரிவில் ரிக்வேதம், சாமவேதம், யஜுர்வேதம் ஆகியவையும், இரண்டாவது பிரிவில் அதர்வவேதமும் அடங்கும். சாம, யஜுர் வேதங்களின் பாடல்கள் ரிக்வேதத்தில் காணப்படாதவையல்ல. சாம வேதத்திலுள்ள 1549 பாடல்களில் 78 பாடல்கள் மட்டுமே ரிக்வேதத்தில் இல்லாதவை. யஜுர் வேதத்தில் காணப்படும் உரைநடைப் பகுதிகள் ரிக்வேதத்தில் இல்லை, பாடல் பகுதிகள் பெரும்பாலும் ரிக்வேதத்திலிருந்து எடுக்கப்பட்டவை. ரிக்வேதத்தில் கிடைக்காதவற்றின் தேவையை நிறைவேற்றச் சில ஆக்கப்பட்டு யஜுர் வேதத்தில் இடம் பெற்றன. ரிக்வேதத்திலிருந்து பொறுக்கப்பட்டுப் பாடத்தகுந்தவை என உள்ள சாமவேதப் பாடல்கள் சாமானி எனப் பெயர் பெற்றன. அதர்வ வேதத்தின் இருபதாவது பகுதி முழுவதும் ரிக்வேதத்திலிருந்து எடுக்கப்பட்டதாகும். மற்ற வேதங்களுடன் தொடர்பு ஏற்படுத்திக்கொள்ள வேண்டும் என்பதற்காகவே இப் பகுதி சேர்க்கப்பட்டிருக்கலாம். பிற பகுதிகளெல்லாம் உள்நாட்டு மக்களிடை ஏற்பட்ட உறவின் காரணமாக எழுந்த பகுதிகளாயிருக்கலாம். நான்கு வேதங்கள் ஒவ்வொன்றிலும் 'மந்திரங்கள்', 'பிராமணங்கள்' என்ற இரு பிரிவுகளுண்டு. 'மந்திரம்' என்பது இப்பொழுதுள்ள பொருளி

லிருந்தும் மாறுபட்டுச் சிந்தனையே உந்தச் செய்யும் கருவி, வாசகம், புனித வாக்கியம், வாழ்த்து, வேதப்பாடல் என்பவற்றைக் குறித்தது. மந்திரங்களின் ஒவ்வொரு தொகுதியும் 'ஸம்ஹிதை' எனப்பட்டது. வேதத்தின் இரண்டாவது பகுதியான பிராமணங்கள் பிராமணர் கடைப்பிடிக்க வேண்டிய வழிகளைச் சொல்வதாகும்; மந்திரங்களைக் கடைப்பிடிப்பது எவ்வாறு என்பதை விளக்குகின்றன; யாகங்கள் பற்றிய முறைகளையும் சொல்கின்றன. ஆரண்யகங்களும், உபநிஷத்துக்கள் அல்லது வேதாந்தங்கள் என்பவையும் அவற்றிலடங்கும். பிராமணங்கள் வேதப் பாடல்களுக்குப் பிற்பட்டவையாகும். பிராமணங்கள் காலத்தால் மிகப் பழைமையான உரைநடையாகும். ஆரண்யகங்களும் உபநிஷத்துக்களும் பிராமணீயம் உலகத்துக்களித்த நன்கொடையாகும். ஆசிரியன் காட்டில் மாணுக்கனுக்கு அளித்த கல்வியாகும். ஆரண்யகம் முழுவதும் பயிற்சி பெற்றவனுக்கு நல்கப்பட்டது உபநிஷத். உபநிஷத்துக்கள் வேதங்களின் ஒரு பகுதி—வேதத்தின் எல்லை என்ற கருத்து பரவியிருந்தாலும் ரிக்வேதப் பாடல்களுக்கு வெகு காலத்துக்குப் பின்னரே அவை இயற்றப்பட்டிருக்க வேண்டும். ரிக்வேதத்தில் 1028 பாடல்கள் உள்ளன.

வேதங்களில் சொல்லப்பட்ட தெய்வங்களை ஐந்து வகைகளாகப் பிரிக்கலாம்—(1) மேலுலகத் தெய்வங்கள்; (2) ஆகாயத்துத் தெய்வங்கள்; (3) நிலவுலகத் தெய்வங்கள்; (4) கருத்துலகத் தெய்வங்கள்; (5) கீழ்ப்படித் தெய்வங்கள், அவற்றுட் சில முக்கியமான தெய்வங்களைப்பற்றிக் குறிப்பிடுவது பொருந்தும். ஆரியர்களுடைய தெய்வங்களுள் மிகத் தொன்மையுடையது தியாவ்ஸ். ஆரியர்கள் இந்தியாவுக்கு வருமுன்னரே வழிபட்ட தெய்வமாயிருக்கலாம். கிரேக்க ஜீயசுக்கும் (zeus) ஜுபிட்டருக்கும் ஒத்த தெய்வம். தியாவ்ஸ் வானமாகும், அவனுடைய துணைவி பிருதிவி என்ற பூமியாகும். தியாவ்ஸைப் போலவே வருணனும் ஆரியர்களுடைய தொன்மையான தெய்வம். ஓங்கி உயர்ந்த தியாவ்ஸைப் போல் வருணனும் பிற்காலத்தில் உயர்ந்த படியை இழந்துவிட்டான். 'மித்ர' ஆதித்தியர்களில் ஒருவன். வருணனுடன் இணைத்துப் பேசப்படுகிருன். மித்ரன் ஆட்சி பகலிலும் வருணன் ஆட்சி இரவிலும் நடக்கின்றன. சூரியன் ஒரு பாடலில் தியாவ்ஸ் உடைய பிள்ளை யென்றும் மற்ருெரு பாடலில் அதிதியின் பிள்ளை யென்றும் சொல்லப்படுகிருன். ஓரிடத்தில் உஷை அவனுடைய மனைவி யென்றும் மற்ருேரிடத்தில் அவனுடைய தாய் என்றும் சொல்லப்படுகிருள். சூரியன் ஏழு குதிரைகள் பூட்டிய தேரைச் செலுத்துகிருன். வெளியை ஊடுருவிச் செல்லும் கழுகு என்று வர்ணிக்கப்படுகிருன். உலகை

உருவாக்குபவன் விசுவகர்மன். தெய்விகக் குணங்களுடையவன் (விசுவதேவியத்) என்று புகழப்படுகிருன்.

ஸவித்ரி சில வேளைகளில் சூரியனினின்றும் வேறுபட்டவனென்றும் சில வேளைகளில் சூரியனென்றும் சொல்லப்படுகிருன். இவ்விரண்டு பெயர்களும் சில வேளைகளில் வேறுபாடின்றி ஆளப்படுகின்றன. ஸவித்ரி சிறப்பாகத் தங்கமயமானவன்; தங்கக் கண்களும் தங்கக் கைகளும், தங்க நாக்கும், பஞ்சள் மயிரும் உடையவன். தங்கக் கவசம் அணிந்து, ஒளியுடன் தங்கத் தேரில் மங்கலான சிவப்புநிறமும் வெள்ளைக் கால்களும் உள்ள குதிரைகள் இழுத்துச் செல்ல மேல்நோக்கியும் கீழ்நோக்கியும் செல்கிருன். ஸவித்ரி வணக்கம் இன்றுவரை நடந்து வருகிறது. பிராமணர்கள் சந்தியாவந்தனத்தில் அவனை வணங்குகிருர்கள். "ஸவித்ரி தெய்வத்தின் கீழ்த்திக்குப் பாத்திரமாவோமாக. நம்முடைய வணக்கத்துக்கு அவன் ஊக்கம் தருவோனுக.'' (ரிக்வேதம், III. 62, 10)—''வேதங்களில் எதுவும் காயத்ரியினும் உயர்ந்ததில்லை" என்று ஸ்கந்தபுராணம் சொல்கிறது. ரிக்வேதத்தில் பதினெரு பாடல்கள் ஸவித்ரியைப் புகழ்கின்றன.

(தொடரும்)

---

## புகழ்

புகழுக்கு உரிமையுடையோர் மிகச் சிலரே. விலைக்கு வாங்க முடியாத மிகச் சிலவற்றுள் புகழும் ஒன்று. மனித இனத்தின் நன்கொடை அஃதொன்றே. அதனைப் பெறுதற்குத் தகுதித் தேர்வு மிகுதி. அத் தகுதியைக் கண்ட பின்னரும் உலகம் அதனை வழங்க மனமில்லாதது போல் அதனை அளந்துதான் வழங்குகின்றது.

—அறிஞர் ஜான்சன்

# கொற்கை

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

"கொற்கையில் இருந்த வெற்றிவேற் செழிய"னைச் சிலம்பு பாடுகின்றது. "வெற்றி வேற்கை வீர ராமன் கொற்கை யாளி குலசேகரன் புகல்" நூல், இளஞ்சிறுவரும் அறிந்தது! பழங் கொற்கை, பரவை அலைப்பால் பட்டழிந்தாலும், அக் கொற்கைச் சிறப்பும், கொற்கைப் பெயர் தாங்கியுள்ள ஓர் ஊரும் ஏட்டு வழக்கிலும் நாட்டு வழக்கிலும் இன்றும் விளங்கி வருகின்றன.

கொற்கையின் சிறப்பை முதற்கண் ஆய்வின்வழியே உலகுக்கு உணர்த்தியவர் முனைவர் கால்டுவெல்! 'கோ நகர்—கோற்கை' என்னும் நூல் வழியே கொற்கையைத் தடம்பதித்துக் காட்டியவர் நுண்கலைச் செல்வர் அ. இராகவன்!

அறிஞர்கள் கொற்கையின் இடமும் தடமும் கண்டு தெளிந்துள்ளனர்; ஊர்ப் பெயர்க் கரணியம்பற்றியும் அறியத் தலைப்பட்டுள்ளனர். கொற்கைப் பெயராய்வே இக் கட்டுரையின் உள்வீடு.

கொற்கை என்பது, 'கொல்கே', 'கொல்கீஸ்' என்று கிரேக்க நாட்டவராலும் உரோம நாட்டவராலும் குறிக்கப்பெற்றுள்ளதாம்! திருச்செந்தூர் கல்வெட்டு ஒன்றில் 'கொல்கை' என்ற குறிப்புள்ளதாம். ஆதலால் கொல்கை என்னும் பெயரே கொற்கை ஆகியிருக்க வேண்டும் என்று அறிஞர் கால்டுவெல் ஒரு முடிவுக்கு வந்தார்.

கொல்கை என்பதைக் 'கொல்+கை' எனப் பிரித்துக் 'கொலை செய்யும் கைபோன்றது' என்று பொருள் கண்டார். தொன்முது மாந்தன் கொல்கருவி கையாகவே இருந்ததாகலின், அப் பெயர்ப் பொருத்தத்தால் 'கொற்கை'யாகி இருக்க வேண்டும் என்று விளக்கினார்! கொற்கையில் இருந்தவர் மட்டுமோ கொல்கையர்? இக் கொடுமைப் பெயரையோ தம் ஊர்க்குச் சூட்டி உவகை யுறுவர்?

முனைவர் கால்டுவெல் வரைந்த திருநெல்வேலி வரலாற்று நூலை மொழி பெயர்த்தவர் முனைவர் திரு. ந. சஞ்சீவி. அவர் இவ் வாய்வுக்கு, ஒரு மேல்விளக்கக் குறிப்புக் காட்டினார். கடற்கரைப் பட்டினமாகிய அந் நகர்க்கும் கடல் அலைப்புக்கும் உள்ள தொடர்பை உன்னி, 'அலைகள் கொல்லும் (தாக்கும், தகர்க்கும்) இடம்' என்று பொருள் கண்டார். அதற்குக் "கடற்கரை மெலிக்கும் காவிரிப் பேரியாறு" என்னும் சிலம்பின் அடியையும் மேற்கோள்

காட்டினர். இஃது அலைத் தாக்குதலை நிறுவும் சான்றேயன்றி ஊர்ப்பெயர் அமைதிக்கு உரிய சான்ருகாது என்பது வெளிப் படை. கால்டுவெல் காட்டிய 'கொல்' என்னும் சொல்லுக்கு வேறு நயம் காட்டி விளக்கிய விளக்கமே இஃது என்ற அளவில் அமையலாம்; அவ்வளவே! பொருளொடு பொருந்துவது அன்ரும்.

'கை' என்பது இடப் பொருட் சொல் என்று முனைவர் சஞ்சீவி யார் கூறுவது ஏற்கும் இனிய குறிப்பு. குறுக்கை, திருவதிகை, திருக் கடிகை, வேளுக்கை, திருத்தணிகை என்னும் இன்ன ஊர் பலவும் இவ்வியலால் அமைந்தனவேயாம். ஆனல் 'கொல்' என்னும் 'சொல்' பற்றி ஆய்ந்தே ஒரு முடிவுக்கு வரவேண்டும்!

கொல் என்பதன் பொருள் கொலைத்தொழிலொடு தொடர்பு கொண்டதோ? கொல்லுத் தொழிலொடு தொடர்பு கொண்டதோ? முதற்கண் ஆய்வுக் குரிய செய்தி ஈதே.

ஒரே சொல்மூலத்தின் வழியே அமையும் பல பொருட் புணர்ச்சியை முட்டுரு வகையில் அமைத்தலே சங்கச் சான்ருேர் வழக்கு. அவ் வழக்கினைக்கொண்டு ஆய்தலே முட்டறுத்து முடிவுறுத்த வல்லதாம்!

கொல்லுதல் தொழில் சுட்டும் புணர்ச்சிகள் எல்லாம் இயல்பு வழிப்பட்டன. கொல்குறும்பு, கொல்படை, கொல்பிணி, கொல்புனம், கொல்களிறு என்றே பழ நூல்களில் பயின்றுள. கொற்குறும்பு, கொற்படை, கொற்பிணி, கொற்புனம், கொற்களிறு என எங்கும் 'ல'கரப்புள்ளி, 'ற'கரப்புள்ளியாய்த் திரிந்தன அல்ல.

"பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும்
கொல்குறும்பும் இல்லது நாடு" —திருக்குறள் 735

"செல்லுறழ் மறவர்தம் கொல்படைத் தரீஇயர்" —பதிற். 58

"கொல்படை தெரிய வெல்கொடி நுடங்க" — ,, 67

"கொல்பிணி திருகிய மார்புகவர் முயக்கம்" — ,, 50

"கொல்புனக் குருந்தொடு கல்லறைத் தாஅம்" —அகம். 133

"இருஞ்சே ருடிய நுதல கொல்களிறு" —நற். 51

"கொல்களிற்று ஒருத்தல்" — ,, 92

"கொண்டி மறவர் கொல்களிறு பெறுக" —பதிற். 43

"கொல்களிற்று உரவுத்திரை பிறழ" — ,, 50

"கொடி நுடங்கு இலைய கொல்களிறு மிடைந்து" — ,, 52

"கொல்களிறு மிடைந்த பஃறோல் தொழுதி" — ,, 83

"கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்" புறம். 9

"கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும்" ,, 55

"உயர்ந்தோங்கு மருப்பிற் கொல்களிறு" ,, 159

'கொல்' எனும் இவையெல்லாம், கொலைத் தொழிற்பாற்பட்டு, வல்லின வருமொழிமுன் இயல்பாய் நின்றன. இனிக், கொல்லுத் தொழில் தொடர்பினவற்றைக் காண்போம்.

தொண்டைமானுழைத் தூது சென்ற ஔவையார் பாடிய புறப்பாட்டில் படைக்கலங்களைச் சுட்டிக் காட்டி,

"இவ்வே, பீலி யணிந்து மாலை சூட்டிக்
கண்டிரள் நோன்காழ் திருத்திநெய் யணிந்து
கடியுடை வியனக ரவ்வே; அவ்வே
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
கொற்றுறைக் குற்றில மாதோ" (95)

என்பதில் கொல்லுத்துறை 'கொற்றுறை' யாதல் அறிக.

"கொண்டுழிப் பண்டம் விலையொரீஇக் கொற்சேரி"

என்னும் ஐந்திணை ஐம்பதும், (21)

"கொற்சேரித், துன்னூசி விற்பவர் இல்"

என்னும் பழமொழியும் (50) 'கொல்லுச் சேரி'யைக் கொற்சேரி என்றது அறிக.

கொற்பழுத் தெரியும் வேலர் என்று வேலும் (435) கொற்புனைந் தியற்றிய கொலையமை கூர்வாள் என்று வாளும் (1. 46 : 89) சிந்தாமணியிலும் பெருங்கதையிலும் வந்தமை அறிக.

இனி, ஆசிரியர் தொல்காப்பியனார்,

"நெல்லும் செல்லும் கொல்லும் சொல்லும்
அல்லது கிளப்பினும் வேற்றுமை இயல"

என்றும், (371)

பவணந்தியார்,

"நெல்லும் செல்லும் கொல்லும் சொல்லும்
அவ்வழி யானும் றகர மாகும்"

என்றும் (232) விதி வகுத்ததையும், இவற்றுக்கு உரைகண்டோர் காட்டிய எடுத்துக்காட்டுக்களையும் நோக்குக.

"கோல் என்பது சூர் என்றாற்போலக் 'கொல்லன்' என்னும் உயர்திணைப்பொருளைக் காட்டி நின்ற அஃறிணைச் சொல்" என்று சங்கர நமச்சிவாயரும், முகவை இரமாநுசக் கவிராயரும் நன்னூலின் உரைக்கண் விளக்கியதை உன்னுக.

இவற்றால், கொலைத் தொழில் கொண்டு கொற்கைப் பெயர் பெற்றிருக்க இயலாது என்றும், கொல்லுத் தொழில் கொண்டே கொற்கைப் பெயர் பெற்றிருக்க வேண்டும் என்றும் துணிக.

கொல்லுத் தொழில், பயில வழங்கும் தொழிலாயிற்றே, அதன் பெயரால் ஓர் ஊர்ப் பெயர் அமைதல் சாலுமோ எனின், ஆய்ந்து கொள்ளத் தக்கதேயாம்.

அலைவாய்க் கரையில் அமைந்த ஊரெல்லாம் அலைவாய் என்னும் பெயர்க்கு உரியவையாயினும் 'திருச்சீரலைவாய்' எனத் திருச்செந்திலும், அலைக்கரைவாயெல்லாம் ஒலியெழுப்புதல் உண்டு எனினும் 'தரங்கம் பாடி' என ஓர் ஊரும், கடல் முனைக் கோடியெல்லாம் கோடிக்கரை எனினும் 'கோடிக்கரை' என ஓர் இடமும் உளவாதல் போலப் பலப்பல இடங்களிலும் கொல்லுத் தொழில் நிகழுமாயினும் யாதானும் ஒரு தனிச்சிறப்பு உண்மையால் அத் தொழில் தொடர்பாக ஊரின் பெயர் இடப்பெற்றிருத்தல் வேண்டும் என்க. அவ்வாறு தனிச் சிறப்பாகக் கொல்லுத் தொழில் நடந்ததேயாமாயின், 'அதுதான் யாது' என்பதை அறிவதே திறுவும் சான்றாகும்.

பொன்வகை ஐந்தென முந்தையோர் கண்டனர். அவை இரும்பு, ஈயம், செம்பு, தங்கம், வெள்ளி என்பன. அவற்றைக் கொண்டு பணிசெய்வோர் 'பொற் கொல்லர்' எனப் பெற்றனர். 'பொன் செய் கொல்லர்'(ன்) எனச் சிலம்பு கூறும் (5:31; 20:74) கொல்லுத் தொழில் செய்துகொண்டு கொழுந்தமிழும் வளர்த்த சான்றோர்கள் தங்கால் பொற் கொல்லன் வெண்ணாகனார், மதுரைக் கொல்லன் புல்லன், மதுரைக் கொல்லன் வெண்ணாகனார், மதுரைப் பெருங் கொல்லன் என்பார் என்பது பெயரளவானே புலப்படும்.

படைக்கலம் முதலாம் கருவிகள் செய்தல், அணிகலம் உண் கலம் முதலாம் கலங்கள் செய்தல், தெய்வத் திருவுருச் செய்தல் என்பவை சீறூர் பேரூர் இடங்களிலெல்லாம் நடைபெறும் கொல்லுத் தொழில்; ஆனால், இவ்வாறு பொதுமைக் கொல்லு நீங்கிய தனிமைக் கொல்லு ஒன்று உண்டு. அது 'காசு' என்னும்

நாணயம் செய்யும் கொல்லுத் தொழிலாம். காவலரால் நிறுவப் பெற்றுக் கட்டுக் காவலுடன் செய்யப்பெறுவது அத் தொழில். அரசர் இருந்து கோன்மை செலுத்தும் கோநகர்க்கண்ணே செய்யப் பெறுவதாம் தொழில் அதுவேயாம். இதனை எந்நாட்டு வரலாறும் தெள்ளிதிற் காட்டுதல் அறிந்ததே!

ஆங்கிலவர் ஆட்சிக் காலத்தில் பொற்காசு அடித்த இடம் தங்கசாலைத் தெருவாக இன்றும், சென்னையில் விளங்குதல் கண்கூடு. பண்டை நாளில் தங்கசாலையை 'அக்கசாலை' (அஃகசாலை) என வழங்கினர். இந்நாளில் இரும்பாலை, கரும்பாலை, செக்காலை, நூற்பாலை என்று விளங்குவன போலத் தங்கசாலை விளங்கியது. தங்க வேலை நடைபெறும் இடத்தை 'அக்கசாலை' என்பது முந்தையோர் வழக்கு.

கோவலன் பொற்கொல்லனை முதற்கண் கண்ட இடத்தைக் குறிக்கும் இளங்கோவடிகளார்,

"கோவலன் சென்றக் குறுமகன் இருக்கையோர்
தேவ கோட்டச் சிறையகம் புக்கபின்"

என்றார். இதனை 'அக்கசாலை' என்றார் அரும்பத உரைகாரர். அக்கசாலைப் பள்ளி என்றார் அடியார்க்கு நல்லார் (19 : 125 - 6)

கொற்கை என்பது கொல்லுத் தொழில் சிறக்க நடைபெற்ற இடம் என்பதைச் சுட்டும் என அறிந்தோம். பொற் கொல்லர் வாழும் தெருவும், பொன்வேலை நடைபெறும் தெருவும் 'அக்கசாலை' எனப் பெயர் பெறும் என்பதையும் அறிந்தோம். கொற்கையில் கொல்லுத் தொழில் சிறப்பாக நடைபெற்றது என்பதை இச் சொல்லைக் கொண்டு மட்டுமே முடிவு செய்துவிடுதலினும், பிறபிற சான்றுகளும் உண்டாயின் வலுவாம் அன்றோ! ஆம்; இதனை நிலைப்படுத்துதற்கு மறுக்கொண்ணாச் சான்றுகள் கொற்கைப் பழநகரில் ஒன்றிரண்டல்ல; பல இன்றும் உண்மை, ஆய்வார்க்குத் தனிப்பெரு மகிழ்வு ஊட்டுவதாம். அவற்றை முறை முறையாய் முழுதுறக் காண்போம்.

(தொடரும்)

---

## பயன் தரும் படிப்பு

மற்றெல்லா நூல்களையும் விட வரலாற்று நூல்களைப் படிப்பதுதான் இன்பம் பயப்பதும் மிகு பயன் விளைப்பதுமாகும்.

கார்லைல்

# குன்றக்குடிக் குடைவரைக் கோயில்கள்

[தி. இராசமாணிக்கம், பி.ஏ., பி.காம்., விசாரத்
கூட்டுறவுச் சங்கங்களின் இணைப்பதிவாளர்,
26, இராமகிருஷ்ணு சாலை, சேலம்-7]

"வளமிகுந்த குன்றநகர்" என்றும் "செருமுயல் பனிருகர குமர துன்றிட்ட சிட்ட குண குன்றக்குடி" என்றும், "வயலிநகர் குன்ற மாநகர்" என்றும் அருணகிரிநாதரால் பலவாற்ருலும் சிறப்பிக்கப்பெற்ற குன்றக்குடி இராமநாதபுரம் மாவட்டத்தில் திருப்புத்தூரினின்றும் காரைக்குடி செல்லும் பெருவழியில் உள்ளது. குன்றுதோறும் குடிகொண்ட குமரனின் கோயில் இங்குள்ள குன்றின் மேலும் அமைந்துள்ளது. அடிவாரத்தில் மூன்று குடைவரைக் கோயில்கள் உள்ளன. அவை தெற்கு நோக்கி அமைக்கப்பட்டுள்ளன.

முதற் குடைவரைக் கோயிலிலுள்ள முகப்பு இரண்டு தூண்களையும், இரண்டு அரைத்தூண்களையும் உடையது. தூண்களும் அரைத்தூண்களும் மேலும் கீழும் சதுரமாகவும், நடுவில் எட்டுப் பட்டை கொண்டவையாகவும் உள்ளன. போதிகை கோணத்தின் வடிவத்தில் உள்ளது. குடைவரைக்கு இருபுறமும் வாயிற்காப்போர் காணப்படுகின்றனர். இவர்கள் பல்லவர்கள் அமைப்பில் இரு கைகளுடனும் தலையில் கொம்புடனும் வடிக்கப்பட்டுள்ளனர். வலக்கை கதையின் மீதும் இடக்கை கத்யவலம்பித அஸ்தத்திலும் (தொங்கிய நிலை) உள்ளன. கதையைச் சுற்றிப் பாம்பு காணப்படுகிறது. மார்பில் முப்புரிநூல் அணிந்துள்ளனர். மேலும் இவர்கள் மாமல்ல அமைப்பில் நேராக நின்ற நிலையில் உருவாக்கப்பட்டுள்ளனர்.

கருவறையின் உள்ளே ஏனைய பாண்டியர்களின் குடைவரைக் கோயில்களைப் போன்று சிவன் பாறையிலேயே இலிங்கத் திருவுருவில் செதுக்கப்பட்டுள்ளார். இவரது திருப்பெயர் "மலைக்கொழுந்து நாதர்" என்பதாகும். கருவறைக்கு இருபுறமும் வாயிற்காப்போர் இரு கைகளுடன் திரிபங்க நிலையில் காணப்படுகின்றனர். இவர்களின் தலையில் கொம்பு இல்லை. இவர்களின் ஒரு கை கதையின்மீதும், மற்ருெரு கை இடுப்பில் ஊன்றியும் இருக்கின்றன. பாம்பு கதையைச் சுற்றிக் காட்டப்பட்டுள்ளது

இவர்களும் நேராக நின்ற நிலையில் உருவாக்கப்பட்டுள்ளனர். ஆடையின் மடிப்பு தெளிவாக மடித்துக் காட்டப்பட்டுள்ளது.

குடைவரையின் கீழ்ப்புறத்தில் வலம்புரி விநாயகர் இருகைகளுடன் யோக நிலையில் வடிக்கப்பட்டுள்ளார். வலக் கையில் அவருக்குப் பிடித்தமான மோதகம் காணப்படுகிறது. இடக் கை இடுப்பில் ஊன்றிய நிலையில் உள்ளது. விநாயகர் வழிபாடு அக்காலத்தில் பரவியிருந்தமைக்கு இது தக்க சான்ருக உள்ளது.

அடுத்து ஆடவல்லான் 8 கைகளுடன் அமைக்கப்பெற்றுள்ளது காணவேண்டிய வடிவங்களில் ஒன்ரும். இடக் கரங்களில் கட்டங்கம், அனல், பாம்பு ஆகியவை காணப்படுகின்றன. ஒரு கை 'கஜ அஸ்தத்'தில் அமைந்துள்ளது. வலக்கைகளில் உடுக்கை, மழு ஆகியவை காணப்படுகின்றன. ஒரு கை சூசி அஸ்தத்தில் உள்ளது. கால்கள் ஸ்வஸ்திக் வடிவில் உள்ளன. இதை 'பாத ஸ்வஸ்திகர்'' என்று கூறுவர். வலக் காதில் குண்டலம் இருக்க, இடக் காதில் அணிகலம் ஏதும் இல்லை. இரு புறங்களில் உள்ள பூதங்களில் வலப்பக்கம் உள்ளது மத்தளத்தையும், இடப் பக்கத்தில் உள்ளது தாளத்தையும் அடிப்பதுபோன்று அமைந்துள்ளது. தமிழகத்தில் பொதுவாக நடராசர் வடிவம் நான்கு கைகளுடனும், காலடியில் முயலகனுடனும் காணப்படுகிறது. வடநாட்டில் நடராசர் காலடியில் முயலகன் கிடையாது. இங்கு இவ் வடிவம் 8 கைகளுடன் அமைந்துள்ளதும், முயலகன் இன்றிக் காணப்படுவதும் குறிப்பிடத்தக்கதாம். ஆடவல்லான் வடிவம் அக்கால மக்கள் கொண்ட ஈடுபாட்டை இது காட்டுகிறது.

கருவறைக்கு வலப்புறமாகச் சங்கரநாராயணன் காணப்படுகிருன். சிவன் என்பதற்கு ஏற்ப வலப்பக்கம் சடையும், புலி ஆடையும்; மழுவும், தென்படுகின்றன. திருமால் என்பதற்கு இணங்க இடப்புறம் கீரிட மகுடமும், பட்டாடையும், சங்கும் அமைந்துள்ளன. முற்கால சங்கரநாராயண வடிவங்களில் இஃது ஒன்று. அக்காலத்தில் சைவ வைணவ வேறுபாடு இல்லை என்பதை இது சுட்டிக்காட்டுகிறது.

அடுத்து 8 கைகளுடன் கொற்றவை புதைசிற்பமாக உருவாக்கப்பட்டுள்ளாள். வலக்கை ஒன்றில் சக்கரம் காணப்படுகிறது. மற்ருெரு கை வரத முத்திரையில் உள்ளது. இடக்கை ஒன்றில் சங்கு உள்ளது. ஆடையின் மடிப்பு விசிறிபோன்று அழகாக அமைந்துள்ளது. வலப் பக்கம் உள்ளவர் தம் தலையை வாளால் அரிந்து கொள்வதாகக் காட்டப்பட்டுள்ளார். இடப் பக்கம் உள்ள உருவத்தில் கையில் உள்ளது உடுக்கை போன்று காணப்

படுகிறது. வெற்றிக்கடவுளாம் கொற்றவைக்குப் பலிகொடுக்கும் வழக்கம் பாண்டிய நாட்டிலும் இருந்தமைக்கு இது சான்று பகர் கிறது. வீரம் எவ்வாறு போற்றப்பட்டது என்பதையும் தெளி வாக்குகிறது.

கருவறைக்கு இடப்பக்கம் இலிங்கோற்பவர் செதுக்கப் பட்டுள்ளார். இலிங்கோற்பவர் வடிவம் என்பது பொதுவாக இலிங் கத்தின் சிவ பாகத்தின் நடுவில் சிவன் அமைந்துள்ளதுதான். ஆனால் இங்குச் சிவன் இடுப்புவரை உருவாகக்கப்பட்டு, அதற்குக் கீழே தூணாக அமைக்கப்பட்டுள்ளது. இத்தகைய அமைப்பினை பிள்ளையார்பட்டிக் குடைவரைக் கோயிலிலும், திருமெய்யம் குடை வரைக் கோயிலிலும் காணலாம். வலப் பக்கத்தில் பிரமாவும், இடப் பக்கத்தில் திருமாலும் கைகூப்பிய நிலையில் உள்ளனர். பிரமாவின் பின்வலக் கையில் அக்கமாலையும், பின்இடக்கையில் கமண்டலமும் காணப்படுகின்றன. திருமாலின் பின்வலக்கையில் சங்கும், பின்இடக்கையில் சக்கரமும் தென்படுகின்றன. ஆடை யின் மடிப்பு விசிறி போன்று எழிலாக உள்ளது.

அடுத்து 4 கைகளுடன் திருமால் அமைக்கப்பட்டுள்ளான். பின்வலக் கையில் சங்கும், பின்இடக் கையில் சக்கரமும் உள்ளன. முன்வலக்கை இடுப்பில் ஊன்றியும், முன் இடக் கை தொங்கிய நிலையிலும் காட்டப்பட்டுள்ளன. இவரது ஆடை தெளிவாகவும் விசிறிபோன்றும் உள்ளது. இவரை அடுத்து மனிதவடிவில் இவரது வாகனமாம் கருடன் உருவாக்கப் பட்டுள்ளான்.

அடுத்து 4 கைகளுடன் கூடிய முருகன் அமைக்கப் பட்டுள்ளான்.

முதல் இரு குடைவரைகளிலும் இடையில் 4 கைகளுடன் வலம்புரி விநாயகர் உருவாக்கப்பட்டுள்ளார். பின்வலக் கையில் பாசம் காணப்படுகிறது. பின்இடக்கையில் உள்ளது தெளி வாகத் தெரியவில்லை. முன் வலக்கையில் மோதகமும் முன் இடக் கையை இடுப்பில் ஊன்றியும் யோக நிலையில் அமைக்கப்பட்டுள் ளார்.

இரண்டாவது குடைவரைக் கோயிலிலும் பாறையிலேயே இலிங்கத்திருவுரு செதுக்கப்பட்டுள்ளது. இவரது திருப்பெயர் "அண்ணாமலையார்" என்பதாம். இருபுறமும் வாயிற்காப்போர் இரு கைகளுடன் நேராக நின்ற நிலையில் காணப்படுகின்றனர். [illegible]ப்புறம் உள்ளவர் தலையில் கொம்பும், கரந்தமகுடமும்

உள்ளன; திரிபங்க நிலையில் இடக் கை கதையின் மீதும், வலக் கை தொங்கிய நிலையிலும் காட்டப்பட்டுள்ளன. மேற்புறம் உள்ளவர் சமபங்க நிலையில் வலக் கை கதையின்மீதும் இடக் கை இடுப்பில் ஊன்றியும் செதுக்கப்பட்டுள்ளார். கதையைச் சுற்றிப் பாம்பு காணப்படுகிறது. இவரது தலையில் கொம்பு இல்லை.

கருவறைக்கு மேற்புறமாக 4 கைகளுடன் திருமால் புதை சிற்பமாகக் காணப்படுகிறன். பின்வலக்கையில் ஒன்றும் இல்லை. பின் இடக் கையில் சங்கு உள்ளது. முன்இடக்கை தொங்கிய நிலையில் காட்டப்பட்டுள்ளது. ஆடையின் மடிப்பு தெளிவாக அமைக்கப்பட்டுள்ளது. அவருக்கு அருகில் அவரது ஊர்தியாம் கருடன் மனித வடிவில் காணப்படுகிறன்.

மூன்றுவது குடைவரைக் கோயிலிலும் இலிங்கத்திருவுரு பாறையிலேயே அமைக்கப்பட்டுள்ளது. இவனது திருப்பெயர் "சுந்தரேசுவரர்" எனப்படுவது. முகப்பு இரண்டு தூண்களையும், இரண்டு அரைத்தூண்களையும் கொண்டது. அவை நடுவில் எட்டுப்பட்டையும், மேலும் கீழும் சதுரமாகவும் உள்ளன. போதிகை கோணத்தின் வடிவம் உள்ளது. இங்குப் புதை சிற்பங் கள் கிடையா.

குடைவரைகளுக்குச் சற்றுத் தொலைவில் சமணர்களின் 7 படுக் கைகள் உள்ளன. இவை முன்பு சமணர்கள் தங்கி, வழிபாடு நடத்திய இடமாக இருக்கவேண்டும். ஏற்கெனவே வழிபாடு நடந்த இடங்களில் குடைவரைகளை அமைப்பது அக்கால மரபு. அம்மரபினை ஒட்டி, இங்கும் குடைவரைகள் உருவாக்கப் பட்டுள்ளன.

இங்குள்ள குடைவரைக் கோயில்களில் முதல் இராசராச சோழன், முதற் குலோத்துங்க சோழன், மூன்றும் குலோத்துங்க சோழன், மாறவர்மன் சுந்தரபாண்டியன், சடையவர்மன் சுந்தர பாண்டியன் ஆகியோரின் கல்வெட்டுக்கள் காணக்கிடைக்கின்றன. முதலாம் இராசராச சோழன் கல்வெட்டில் இறைவன் திருக் குன்றக்குடி பரமசுவாமி எனப்படுகிறன். மேலும் இறைவனை தேனூற்றுநாயகர், திருமலை உடைய நாயனர், மூலஸ்தான உடைய நாயனர் என்ற பெயர்களாலும் அழைக்கப்பட்டமை கல் வெட்டுக்களினின்றும் தெரியவருகிறது. மாறவர்மன் சுந்தர பாண்டியன் இரண்டாவது பாண்டியப் பேரரசைத் தோற்றுவித் தான். 4 நூற்றுண்டுகளுக்குமேல் பேரரசாகக் கோலோச்சிய சோழ அரசை மூன்றும் குலோத்துங்க சோழன் காலத்தில் வீழ்த்தி அதன் தலைநகரங்களை அழித்தான். பொன்னமராப்பதியில்

இருந்தபோழ்து, தன்னை வணங்கிய சோழ மன்னருக்குச் சோணாட்டை மீண்டும் வழங்கிச் ''சோணாடு வழங்கியருளிய சுந்தர பாண்டியதேவர்'' என்ற சிறப்புப் பெயர் பெற்றான். இச் செய்திகளை இங்குள்ள இவனது கல்வெட்டு தெரிவிக்கின்றது.

இங்குள்ள குடைவரைகளின் அமைப்பு பல்லவப் பேரரசனான மகேந்திரவர்மன் பாணியில் உள்ளது. இருப்பினும் அவனுடைய வழித்தோன்றலும், காஞ்சி கைலாசநாதர் கோயிலை எழுப்பியவனுமான இரண்டாம் நரசிம்மவர்மன் என்ற இராசசிம்மன் காலத்தில் செதுக்கப்பெற்ற குடைவரைகளைப் போன்று இங்கும் புதை சிற்பங்களுக்கு அதிக முதன்மை அளிக்கப்பட்டுள்ளது. இங்குள்ள புதை சிற்பங்கள் முற்காலப் பாண்டியர்களின் கலைச்செல்வங்களாம். இராசசிம்மன் அமைப்பு கி. பி. 674 முதல் கி. பி. 800 வரை என்று கொள்ளப்பட்டுள்ளது. எனவே இங்குள்ள குடைவரைக் கோயில்களை 8ஆம் நூற்றாண்டைச் சார்ந்தனவாகக் கருதலாம்.

----

## சமயம்—ஒரு விளக்கம்

''யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக் கென்கடவேன்'' என்ற மேலோர் திருமொழி இடையறாது என்னுள்ளத்திற் றோன்றி என்னை வருத்துகின்றதே! என்றிவ்வாறெல்லாம் உயிரினறிவானது உள்மடங்கி ஐம்பொறிகளின் குறும்பை யெல்லாம் ஒடுக்கிக்கொண்டு தனது நிலையை ஆய்ந்து பார்க்குங் காலந்தான் உயிர்களுக்கு என்றும் மாறாது நிகழும் சமயமாதலின் இங்ஙனம் நினைவு நிகழும் சமயமே சமயம் அல்லது மதம் என்று ஆன்றோரான் வழங்கப்பெற்றது.

—மறைமலையடிகள்

(சைவசித்தாந்த ஞானபோதம், பக். கூ௫)

# பாட்டியல் பெயர்க்காரணம்-தோற்றக்காரணம்

[அரங்க நலங்கிள்ளி]

தமிழிலக்கண வரலாற்றில் ஏறக்குறைய கி. பி. 10ஆம் நூற்ருண்டில் தோன்றிய ஓர் இலக்கணவகையே பாட்டியல் என்பதாகும். இவ்வகை இலக்கண நூல்கள் பாட்டியல் எனும் பெயர் பெற்றமைக்கான காரணம் என்னவென ஆய்வதும், இப் பாட்டியல் நூல்கள் யாப்பியலினின்றே தோன்றிற்று என்பாரின் கூற்றினை ஆய்வதும் இக் கட்டுரையின் நோக்கமாகும்.

I

பாட்டியல் என்ற சொல்லில் உள்ள பாட்டு என்பது குறித்து நின்ற பொருள் என்னவென்று காணத் தொல்காப்பியத்திலிருந்து துவங்க வேண்டும்.

தொல்காப்பியர் காலத்தில் இலக்கியம் என்ற சொல் ஆட்சிக்கு வரவில்லை. ஆனுல் இலக்கியத்தை உணர்த்திநின்ற வேறு சொல் கையாளப்பட்டு வந்தது. அது செய்யுள் என்ற சொல்லாகும். செய்யுள் என்ற சொல் தொல்காப்பியர் காலத்தில் இலக்கியத்தைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டது. இதற்குத் தொல்காப்பியமே சான்று.

தொல்காப்பியர் அவர் காலத்து இலக்கியங்களை வரிசைப் படுத்திக் காட்டத் துவங்கும் போது,

> ''எழுநிலத் தெழுந்த செய்யுள் தெரியின்
> அடிவரை யில்லன ஆறென மொழிப''[1]

எனக் கூறுகின்ருர். பின்னர் அடுத்த நூற்பாவில்,

> ''அவைதாம்
> நூலி னுன உரையி னுன
> நொடியோடு புணர்ந்த பிசியி னுன
> ஏது நுதலிய முதுமொழி யான
> மறைமொழி கிளந்த மந்திரத் தான
> கூற்றிடை வைத்த குறிப்பி னுன''[2]

1. தொல்காப்பியம் செய், நூ. 157.
2. மேலது ,, 158.

என இலக்கிய வகைகளை வரிசைப்படுத்திக் காட்டுகின்றார். இங்கு நாம் கவனிக்க வேண்டுவது, முதல் நூற்பாவிலுள்ள எழுநிலத் தெழுந்த செய்யுள் தெரியின் எனும் வரியிலுள்ள செய்யுள் எனும் சொல் அடுத்த நூற்பாவிலுள்ள இலக்கியங்களைக் குறித்து நிற்கிறது. எனவே, தொல்காப்பியர் 'இலக்கியம்' எனும் பொருளைக் குறிக்கச் செய்யுள் எனும் சொல்லைக் கையாண்டிருக்கிறார். அஃதாவது தொல்காப்பியர் காலத்தில் செய்யுள் என்ற சொல் இலக்கியங்களைக் குறிக்கும் பொதுச்சொல்லாக இருந்துவந்தது என்பது புலனாகின்றது.

தொல்காப்பியரின் செய்யுள் இயல் என்ற அமைப்பே இப் பொருளை அழகாக விளக்கி நிற்கின்றது. இலக்கியங்களின் யாப்பமைப்பையும் இலக்கியங்களின் வகைபற்றிய செய்தியையும் பேசுவதே தொல்காப்பியரின் செய்யுளியல் பகுதியாகும்.

தொல்காப்பியர் காலத்தில் பாட்டு என்பது அடிவரையறை யுள்ள இலக்கியங்கட்கு மட்டுமே வழங்கப்பட்டிருக்கின்றது. மேலும் எழுவகை இலக்கியங்களில் ஒன்றாகப் பாட்டு என்பது இருந்திருக்கின்றது என்பதை,

> "பாட்டு, உரை, நூலே, வாய்மொழி, பிசியே,
> அங்கதம், முதுசொல்"[3]

எனவரும் நூற்பாவாலும் அறியலாம்.

ஆக இலக்கியங்களைக் குறித்து நின்ற சொல் செய்யுள் என்பதாகும். செய்யுள் + இயல் அஃதாவது இலக்கியங்களுக்கான இலக்கணம் என்ற பொருளில் தொல்காப்பியர் செய்யுளியல் எனப் பெயரிட்டு அமைத்துள்ளார். இது தொல்காப்பியர் காலநிலை.

**சங்ககால நிலை:**

இலக்கியங்களைக் குறித்து நின்ற செய்யுள் என்ற சொல் தொல்காப்பியர் காலத்திற்குப் பிறகு அப் பொருளை இழந்துவிட்டது. சங்ககாலத்தில் இலக்கியத்தைக் குறிக்கப் பயன்பட்ட சொல் பாட்டு என்பதாகும். சான்றாக 'பத்துப்பாட்டு' 'குறிஞ்சிப் பாட்டு,' 'முல்லைப்பாட்டு' எனும் பெயர்கள் அந்தந்த இலக்கியங்களையே குறித்து நிற்கின்றது.

ஆக, சங்ககாலத்தில் இலக்கியங்களைக் குறிக்கப் 'பாட்டு' என்ற சொல்லே பயன்படுத்தப்பட்டது தெற்றெனத் தெரிகின்றது.

3. தொல். செய். 75.

**பாட்டியல் கால நிலை:**

சங்க காலத்தில் கையாளப்பட்ட பாட்டு என்ற சொல் இலக்கியம் என்ற பொருளை இழக்காமல் பாட்டியல் நூல்களின் காலம் வரை தொடர்ந்து கையாளப்பட்டு வந்திருக்கின்றது. அஃதாவது கி. பி. 13ஆம் நூற்றாண்டு வரை. எனவேதான் இலக்கியங்களின் செய்திகளைப்பற்றிய விவரம் தருகின்ற நூல்களுக்குப் பாட்டியல் எனப் பெயரிட்டு நூல் செய்தனர். இலக்கியம் என்ற சொல்லை முதன் முதலில் கையாண்டவர் சேக்கிழார்.

"மூல இலக்கிய மாகப் பாடினார் ஞானசம்பந்தர்."[4] இவர் காலத்துக்குச் சிறிது பின் வரையிலும் பாட்டியல் எனும் பெயரிலே இலக்கியங்களை வகைப்படுத்துகின்ற நூல்கள் எழுந்தன.

**தற்கால நிலை:**

ஆனால் இலக்கியம் என்ற சொல்லாட்சி வந்தபின் இலக்கியங்களைக் குறித்து வந்த பாட்டும் அதற்கு முன் தொல்காப்பியர் கையாண்ட செய்யுள் ஆகிய இருசொல்லும் இலக்கியம் என்ற பொருளை இழந்து தனித்தனியே நின்று, இன்று நாம் பாட்டு எனும் சொல்லுக்குக் கொள்கின்ற பொருளை ஏற்று நிற்கின்றது. சான்றாக 'நான் நான்கு பாடல்கள் மனனம் செய்தேன்' என்ற பொழுதும் 'நான்கு செய்யுளை வரப்படுத்தினேன்' என்ற பொழுதும் நான்கு நான்கு இலக்கியங்களைக் குறிப்பிடாமல் நான்கு பாடல்களையே குறித்து நிற்கின்றது.

ஆக, பாட்டு என்ற சொல் பாட்டியல் நூல்களுக்கு ஏற்படக் காரணம் பாட்டு என்பது சங்க காலத்திலிருந்து சேக்கிழார் காலத்திற்கும் சற்றுப் பின் வரை இலக்கியங்களையே உணர்த்தி நின்றதால் இலக்கியங்களின் இயல்பைப் பேசுகின்ற நூல்கட்குப் பாட்டியல் எனும் பெயரமைந்தது எனக்கொள்வது பொருத்தமுடையது எனலாம். இக் கருத்தை அரண் செய்வதுபோல் "பாட்டு என்பது இங்கே ஆகுபெயர்; அது செய்யுளைக் குறிக்காமல் செய்யுள்களால் ஆன நூலைக்குறிக்கும். இயல் என்பது இலக்கணம். எனவே பாட்டியல் என்பது பிரபந்த இலக்கணமாகும்.[5] என்று திரு. எஸ். கலியாணசுந்தரையரும், "பாட்டு என்பது புலவனால் பாடப்பெறும் இலக்கிய வகைகளைக் குறித்து வழங்கும் பொதுப்

---

4. பெரியபுராணம் பா. எண். 2175.

5. நவநீத நட னார் நவநீதப் பாட்டியல் முகவுரை.

பெயராகக் கொள்ளத்தகும்''.[6] என்று திரு. சண்முகம் பிள்ளை யவர்களும் கூறுவது நோக்கத்தக்கது.

பாட்டியல் காலத்தில் பாட்டு என்ற சொல்லுக்குக் கொண்ட பொருள் வேறு. இக்காலத்தில் பாட்டு என்ற சொல்லுக்குக் கொள்ளும் பொருள் வேறு. இரண்டையும் இணைத்துப் பொருள் காண்பது குழப்பத்தையே தரும்.

அடுத்துப் பிற்காலத்தில் அஃதாவது ஏறக்குறைய கி. பி. 10ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு தோன்றிய ஓர் இலக்கணவகை பாட்டியல் எனக் கூறினோம். இவ்வகை நூல்கள் அதற்குச் சற்றுமுன் னெழுந்த யாப்பிலக்கண நூல்களிலிருந்தே தோன்றியது என இக்கால ஆய்வாளர்கள் கூறுகின்றனர். அவை பின்வருமாறு :

''பேரிலக்கண நூலுள் ஒரு கூறாய யாப்பு தனித்து வளரத் தொடங்கிய பின்னர் யாப்பியலில் பாட்டியல் என்னும் உட் பிரிவு கிளைத்தெழத் தொடங்கியது. பாட்டியல் என்னும் இலக்கணப் பிரிவு யாப்பியலினின்றும் கிளைத்தெழுந்த காலம் ஏறத்தாழ 12 ஆம் நூற்றாண்டு எனலாம் ... ... ... இங்ஙனம் ஐந்திலக்கணத் தொகையினின்று தனித்து வளரத் தொடங்கிய யாப்பியல் பாட்டியல் எனும் சேயை ஈன்றது''[7] எனத் திரு ந. வீ. செய ராமனும்,

''பாவினைத் தொல்காப்பியர் 'நாலியற் றென்ப பாவகை விரியே' என விரித்துக் கூறுகின்றார். அந்தப் பாக்கள் ஆசிரியம், வெண்பா, வஞ்சி, கலி என நால்வகைப்படும்... ... ... ... ......... இம் மரபைப் பின்பற்றி வளர்ச்சி பெற்று அமைந்த பாட்டு வகை களுக்கு இலக்கணம் கூறுவதே பாட்டியல் நூல்கள்''[8] எனத் திரு. அ. ம. சத்தியமூர்த்தியும்,

''யாப்பிலக்கணத்துள் பாட்டியல் அடங்கும் இப் பாட்டியல் ஆராய்ச்சியினை யாப்பின் ஒழிபியல் என்று கூடக் கூறலாம்''[9] என திரு. சோம இளவரசும்,

---

6. மு. சண்முகம் பிள்ளை ''பாட்டில் காட்டும் இலக்கியப் பாகு பாடு'' தமிழாய்வு. தொகுதி-1. ப. 2.

7. ந. வீ. செயராமன். பாட்டியல் திறனாய்வு. பக், 12, 13.

8. அ. ம. சத்தியமூர்த்தி ''பாட்டியல்—ஒரு நோக்கு'' தமிழ்ப் பொழில் ப. 5.

9. சோம. இளவரசு. இலக்கண வரலாறு. ப. 20.

"பாட்டியல் என்பது யாப்பிலக்கணம் ஆகும். பாட்டியல் எனும் பெயரில் உள்ள யாப்பிலக்கண நூல்கள் பலவாகும். அவற்றுள் பன்னிரு பாட்டியல் என்பதும் ஒன்று"[10] எனத் திரு சுந்தர சண்முகனாரும்,

"ஐந்திலக்கணமாக வளர்ந்த தமிழிலக்கணம் யாப்பொடு இணைந்து, பாட்டின் இயல்புகளைப்பற்றியும் நுணுகிப் பார்க்கத் தொடங்கியது. அதனால் செய்யுள் வகைகள் பற்றிய கல்வி தனி நிலையில் பாட்டியல் நூல்களாக மலர்ந்தது"[11] எனத், திரு. ச. வே. சுப்பிரமணியனும் கூறுகின்றனர்.

ஆக, யாப்பியல் 'பாட்டியல்' எனும் சேயை ஈன்றது என்பதும், யாப்பு மரபைப் பின்பற்றி வளர்ந்தது பாட்டியல் என்பதும், யாப்பிலக்கணத்தில் பாட்டியல் அடங்கும் என்பதும், பாட்டியல் என்பதே யாப்பிலக்கணம் என்பதும் ஆகிய இக் கூற்றுக்களெல்லாம் போதிய தெளிவுடன் இல்லை என்பதே இனிவரும் விளக்கங்களால் தெளியலாம்.

நமது மொழியின் இலக்கண வரலாற்றைப் பார்க்கும்போது தொல்காப்பியச் செய்யுளியலும் அதற்குப்பின் கி. பி. 20ஆம் நூற்றாண்டில் எழுந்த இலக்கண நூலான 'தமிழ் நூல்' எனும் இலக்கண நூல் வரையிலும் உள்ள செய்யுள் இலக்கண அமைப்பில் ஒரு பெரும் வேறுபாடு இழையோடுவதைக் காணலாம். தொல்காப்பியர் தமது செய்யுளியலில் உரைநடை இலக்கியத்திற்கும் சேர்த்தே இலக்கணம் கூறுகின்றார். ஆனால் பின்னர் எழுந்த எந்த இலக்கண நூலும் செய்யுளியலின் ஒரு பகுதியாக உரைநடை இலக்கியத்தை ஏற்றுக்கொள்ளவில்லை என்பதை முதலில் விளங்கிக்கொளல் வேண்டும்.

மேலும் இதையொட்டி இரு விளக்கங்கள்:

1. தொல்காப்பியச் செய்யுளியல் இக்காலத்தார் கருதும் யாப்பியல் அன்று; எவ்வாறெனின் தொல்காப்பியச் செய்யுளியல் உரைநடை இலக்கியத்தையும் உள்ளடக்கியது.

2. தொல்காப்பியச் செய்யுளியலிலிருந்துதான் பிற்காலத்தில் யாப்பியலும் பாட்டியலும் கிளைத்தெழுந்ததே தவிர யாப்பிலிருந்து

---

*10.* சுந்தர சண்முகனார், தமிழ் நூல் தொகுப்புக்கலை - முதல் தொகுதி. ப. 44.

*11.* ச. வே. சுப்பிரமணியன், இலக்கணத் தொகை, யாப்பு—பாட்டியல் முன்னுரை.

பாட்டியல் கிளைத்தெழவில்லை என்பதும் தெளிவாக வேண்டிய ஒன்று.

இக் கூற்றினை உறுதி செய்யச் செய்யுளியலின் முதல் நூற்பாவே உறுதுணையாய் நிற்கின்றது. எவ்வாறெனின் தொல்காப்பியர் 'மாத்திரை எழுத்தியல் அசைவகை எனாஅ' எனத் துவங்கி 'யாப்பியல் வகையின் ஆறுதலையிட்ட அந் நாலைந்தும்' என யாப்பியல் செய்திகளை அடைகொடுத்துப் பிரித்துவிட்டு அடுத்து 'அம்மை அழகு' எனத் துவங்கி 'விருந்து' போன்ற இலக்கியச் செய்திகளைக் கூறிப் பொருந்தக்கூடிய எட்டும் எனப் பிரித்து நூற்பாவை முடிக்கின்றார். இவ்வமைப்பே பிற்காலத்தில் யாப்பு, பாட்டியல் என இரண்டாகப் பிரிவதற்குக் காரணமா யமைந்திருக்க வேண்டும். இதனால் தொல்காப்பியரே தமது செய்யுளியலில் யாப்பினுள் பாட்டியல்பற்றிய செய்திகளை அடக்க நினைக்கவில்லை என்பதும் தெரிகின்றது.

இவ் விளக்கங்களே யாப்பிலிருந்து பாட்டியல் தோன்றவில்லை என்பதற்குப் போதுமான சான்றுகளாகும்.

---

## பாட்டே துணை

[தி. நா. அறிவுஒளி., க. மு., கல். இ.,]

முகநிலை :

பாட்டே எனக்குத் துணை ! தமிழ்ப்
பாட்டுக்கு வேறேது இணை ? அன்புப் (பாட்டே)

இடைநிலை :

கேட்டுக் கேட்டு உயிர் உருகும் ; மனம்
ஆட்டம் போட்டு நெகிழ்ந்துருகும், இசைப் (பாட்டே)

முரிநிலை :

சொல்லெல்லாம் தேன் சொட்டும்
சுவையெல்லாம் வான் முட்டும்
வெல்லுமெழிற் பொருள் பொழியும்
வியப்பழகின் அருள் வழியும் (பாட்டே)

உவமையெனும் யாழிசைக்கும்
உருவகமாம் குழலிசைக்கும்
தவவுள்ளுறை இறைச்சிதரும்
தனிக்குறிப்பு நயந்துளும்பும் (பாட்டே)

உணர்ச்சிக்கோர் உயிரூற்றாம்
உவகைக்கோர் உயிர்க்காற்றாம்
இணக்கத்தின் எழிற்கூட்டாம்
இசைக்கூத்தின் மெய்ப்பாட்டாம் (பாட்டே)

---

## பல்புகழ்ச் செல்வர் கி. ஆ. பெ. விசுவநாதம் பல்லாண்டு வாழ்க!

பொன்னிற மேனியும், பொற்புறு நெடிய உருவமும், எழிலார்ந்த ஒல்லிய உடல் வனப்பும், ஏற்றமிகு தோற்றமும், சாந்தம் குடிகொண்ட திருமுகமும், உள்ளம்போலத் தூய, மெல்லிய 'மசுலின்' வெள்ளை ஆடையும், பொன் மனத்தைப் பொலிவுறக் காட்டும் பொன்னிற மூக்குக் கண்ணாடியும், உள்ளத்தின் ஒளியை வெளிப்படுத்தும் மோதிரங்கள் அணிந்த விரல்களும், தெளிவான சிந்தனையின் எதிரொலியாகத் தோன்றும் எடுப்பான இனிய குரலும், காண்பவரைத் தம்பால் இழுக்கும் காந்த ஆளுமையும் (magnetic personality), ஒரு பெருந்தகையாளர்க்குரிய வடிவமைதியும் கொண்டு, எண்பத்து மூன்றும் அகவையில் அடியெடுத்து வைப்பவராயினும் இளைஞருக்கேயுள்ள சுறுசுறுப்பும், விரைவும், துடிப்பும் சிறிதும் குறையாதவராயும், உள்ள ஒரு தமிழ்ப் பெருமகனாரைக் கண்ணாரக் காணும் விருப்பம் உங்களுக்கு, இருக்கிறதா?

பேரறிஞர் அண்ணாவின் கடமை, கண்ணியம், கட்டுப்பாடு என்ற மந்திரச் சொற்களில் அமைந்துள்ள மூன்று பண்புகளும் ஒருங்கே அமைந்துள்ள ஒரு திருவுருவைக் காண விரும்புகிறீர்களா?

கடிகாரம் தவறினாலும் காலம் தவறாமல் குறித்த காரியங்களைத் தொடங்கி நடாத்தும், காலம் போற்றும் செயல் வீரரைக் காண உங்களுக்கு விழைவு மீதூர்கிறதா? நாநயமும், நாணயமும் (நேர்மையும்), நாணயரும் (செல்வமும்) ஒருங்கே படைத்துள்ள ஒப்பற்ற ஒரு தமிழினத் தானைத் தலைவரைக் கண்டுகளிக்க உங்களுக்கு மிகுதியான விருப்பம் ஏற்படுகிறதா?

தமிழ்மொழி வளரவும், தமிழ்நாடு தன்னாட்சி பெற்றுத் தமிழ் ஆட்சிமொழியாகவும், தீண்டாமை ஒழியவும், சாதிமுறை அழியவும், வானொலி முதலிய பொது இடங்களில் தமிழுக்கு முதலிடம் கிடைக்கவும் இடைவிடாது போராடி வந்திருந்திருக்கும் பொது நலத் தொண்டரைத், தமிழ் வளர்க்குங் கண்ணாளரைக் கண்ணாரக் கண்டு போற்றிப் புகழ உங்களுக்கு ஆசை உண்டாகின்றதா?

திருச்சிராப்பள்ளித் தமிழ்ச் சங்கம், திருச்சிராப்பள்ளிச் சைவ சித்தாந்த சபை, திருச்சி புகையிலை வணிகர் சங்கம், சென்னை மாகாண நீதிக்கட்சி, சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம், தமிழ்

நாட்டுத் தமிழ்க் கழகம், தமிழர் பேரவை, தமிழ்ப் புலவர் குழு முதலிய பல்வேறு கழகங்களில் பொறுப்புமிக்க அமைச்சர் பதவிகளை ஏற்றுப் பணிபுரிந்துள்ள ஒரு பெருந்தகையாளரை, கண்டுகளிக்க உங்கட்குப் பேரவா தோன்றுகிறதா? அவ்வாறாயின், புகழ்பூத்த பொன்னியாற்றினால் வளஞ்சுரக்கும் திருச்சி மாநகரில் நிலையில் திரியாதுயர்ந்த மலைக் கோட்டைக் கருகில் உள்ள மணியக்காரர் தெருவில் முத்தமிழ்க் காவலராய்த் திகழும் வித்தகர் விசுவ நாதத்தைச் சென்று காண்மின்; குறளை வாழ்க்கையோடு இணைத்துப் பேசி விளக்கங்கள் தந்து நம் அறிவுக்கு விருந்தாக அமையும்படி செய்து நம் உள்ளத்தில் திருக்குறள்மீது காதல் மீதூரும்படி செய்யும் திருக்குறட் காவலர் யார்?

தமிழரின் முன்னேற்றத்திற்காகத் 'தமிழர் நாடு' என்ற தாளிகை யினையும், 'தமிழர் கழக'த்தையும் தோற்றுவித்த தோன்றல் யார்? இலங்கை, பர்மா, சயாம், பினாங்கு, கோலாலம்பூர், சிங்கப்பூர் முதலிய பல நாடுகளுக்கும் சென்று தேமதுரத் தமிழோசை பரவச் செய்தவர் யார்?

தமக்கு நியாயமாகத் தோன்றிய நல்ல கொள்கைகளுக்கு எத்துணை எதிர்ப்பு வந்தாலும், கல்லடிகளுக்கும் சொல்லடிகளுக்கும் கலங்காது போராட்டக் களங்கள் பல கண்ட தானைத் தலைவர் யார்?

பத்திரிகைத் துறை, அரசியல் துறை, எழுத்துத் துறை, பேச்சுத்துறை, வணிகத்துறை, சமயத்துறை, பொருளியல் துறை, போராட்டத்துறை, சீர்திருத்தத்துறை முதலிய எத் துறையில் ஈடு பட்டாலும் அத்துணைத்துறையிலும் புகழொடு தோன்றிப் பல்புகழ் ஈட்டி வருபவர் யார்? இவர்தாம் கிடைத்தற்கரிய ஆராவமுதம் போன்ற பெரியவர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் ஆவர்.

இவர்தாம் இருபத்தைந்தாண்டுகளுக்கு முன்பு பம்பாயிலும் தமிழ்ச் சங்கத்தைத் தோற்றுவித்து அங்கே வாழும் தமிழர்களுக்குத் தமிழுணர்வை ஊட்டியவர்; அதன் ஒவ்வோராண்டு விழாவுக்கும் தவறாது போய் வருபவர்; தில்லி, கல்கத்தாத் தமிழ்ச் சங்கங்கட்கும் பலமுறை சென்று உணர்வுமிகு சொற்பொழிவுகளைச் செய்து வந்தவர். மலேசியா, சிங்கப்பூர், இலங்கை முதலிய நாடுகளுக்கும் சென்று பொங்கல் விழாக் காலங்களில் சொற்பொழிவு செய்து வந்தவர்.

### பற்பல அரும்பண்புகள்

தமக்கு எல்லாம் தெரியும் என்ற தற்பெருமை இவர்பால் இல்லை. தமக்கு விளங்காத அல்லது இதுவரை தாம் கேட்டறி

யாத செய்திகளை யார் சொன்னாலும் விருப்பத்துடன் கேட்டறிவார்; எதனையும் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற நோக்கமன்றி இன்னாரிடம் மட்டும் கேட்கலாம், இன்னாரிடம் கேட்கக் கூடாதென்ற வேற்றுமை இவர்பால் இல்லை.

பெரியாரின் தோழராகப், பகுத்தறிவுப் பாசறையில் பலகாலம் பயின்று வந்த இவர் எதனையும் காரணகாரியத் தொடர்பு படுத்திப் பார்த்து உண்மையிருந்தால் ஏற்றுக் கொள்வார், இல்லையெனில் விட்டுவிடுவார்.

தமிழ்ப்பண்பாட்டின் திருவுரு

யாரிடமும் எதையுங் கேட்டுப் பெறாத பெருமிதத் திருவுள்ளம் படைத்தவர் இவர். சொற்பொழிவுக்காக அழைப்பவர்கள் வண்டிச் செலவு மட்டும் கொடுப்பதாகக் கூறிப் பின் மிகையாகப் பணம் கொடுத்தால் மிகைப்பணத்தை உடனடியாகத் திருப்பித்தந்து விடுவார். தம் நூற்றுக்கணக்கான சொற்பொழிவுகளினால் கிடைக்கும் தொகை முழுவதையும் போக்குவரத்துச் செலவு போக மீதமானவற்றைத் தமிழகப் புலவர் குழு அல்லது திருச்சிராப் பள்ளித் தமிழ்ச் சங்கத்துக்குத் தந்துவிடுவார்.

"ஈயென இரத்தல் இழிந்தன்று ;
கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று"

என்ற தமிழ்ப்பண்பாட்டிற்கு வாழும் இலக்கியமாகத் திகழ்ந்து வருபவர் வணக்கத்துக்குரிய திருவாளர் கி. ஆ. பெ. அவர்களாவர்.

கடைச்சங்ககாலத்தில் நாற்பத்தொன்பது புலவர்கள் இருந்தனராகலின், திருச்சிராப்பள்ளித் தமிழ்ச் சங்கத்தைத் தோற்றுவித்த இவர், தமிழ்ச்சங்கம் என்றால் புலவர்கள் நிலையாக இருக்க வேண்டுமென்று கருதி 1959 இல் "தமிழகப் புலவர் குழு" என்ற பெயரில் 49 புலவர்களைக் கொண்ட குழுவைத் தோற்றுவித்தார். தம் செலவில் ஆண்டுதோறும் இருமுறை வெவ்வேறு மாவட்டங்களுக்குப் புலவர்களை அழைத்துச் சென்று புலவர் மாநாடுகள் நடத்தி, அவ்வவ்வூரினரும் புலவர்களுக்குச் சிறப்புக்கள் செய்யுமாறு தொடர்ந்து பணிபுரிந்துவருகின்றார்.

அஞ்சா நெஞ்சினர்

இந்தி எதிர்ப்புக் காலத்தில் ஒருமுறை திருநெல்வேலி சென்று 'தமிழ் வாழ்க' என முழங்கினர். பகைவர்கள் கல்லெறிந்

தனர். ஏழு கல்லடிகளை இவரது உடம்பு ஏற்றது! எனினும் 'தமிழ் வாழ்க' என்ற முழக்கத்தை நிறுத்தினாரில்லை. கல்லடி பட்டதால் உடம்பில் வழிந்த குருதியைத் துடைத்துக்கொண்டே "நான் உயிரோடு இருந்து தமிழை வளர்ப்பதைவிட எனது புதை குழி அதிகமாக வளர்க்கும்" என்றார்.

ஒருமுறை எட்டயபுரத்தில் நாவலர் சோமசுந்தர பாரதியார் தலைமையில் இந்தி எதிர்ப்புக் கொள்கை விளக்கம் செய்தார். இவர்மீது கல்மாரி பொழிந்தது. மண்டையிலிருந்து குருதி வழிந்தது. மேலும் வன்முறையிலிறங்கினர் பகைவர்கள். காவலர்கள் வன்முறைக் கும்பலின்மீது சுட முற்பட்டபோது அவர் களைத் தடுத்து நிறுத்தி. "அவர்களும் தமிழர்களே; இன்றில்லா விட்டாலும் என்றாவது ஒரு நாள் திருந்துவார்கள்" என்று ஏசு பிரானின் கருணையுள்ளத்தோடு மொழிந்தார். கல்வீச்சுக்கும் கலங்காமல் அஞ்சாமல் பேசும் மனத்திண்மை வாய்க்கப் பெற்றுள்ளார்.

பேச்சுத் திறன்

இவர் எதைப்பற்றிப் பேசினாலும் அப் பொருளைக் குறித்து நன்கு சிந்தித்துப் பதற்றமில்லாமல் சீர்தூக்கிப் பேசும் ஆற்றல் வாய்ந்தவர்.

இவர்தம் பேச்சுக்களில் கருத்துச் செறிவும் உணர்ச்சிக் கொந் தளிப்பும் மிகுந்திருக்கும். இடையிடையே நகைச்சுவை களிநடம் புரியும். இவரது பேச்சில் உள்ள எடுப்பும் தொடுப்பும் முடிப்பும் இவருக்கே தனிச்சிறப்புள்ளவை.

எத்தகைய சிக்கலான பொருள்பற்றியும் தம் நுண்மாண் நுழைபுலத்தினால் அலசி ஆராய்ந்து, ஒன்று, இரண்டு, மூன்று என்று வகைப்படுத்திக் கேட்பவர்கள் தெளிவாகப் புரிந்து கொள்ளும் வண்ணம் எளிதாக எடுத்துச் சொல்லும் ஆற்றல் இவருக்கே கைவந்த கலையாகும். இவர்தம் ஆழ்ந்த சிந்தனை யூற்றில் முகிழ்த்த அரும்பெருங் கருத்துக்களை அழகு தமிழில் அள்ளி வழங்குவார். 'மேடைத்தமிழ்' என்ற நூலில் இவர் தமிழகத்துத் தலைசிறந்த சொற்பொழிவாளருள் ஒருவராகப் புகழ்ந் துரைக்கப் பெற்றுள்ளார்.

நா(ண)நய வணிகர்

வாணிக நுட்பங்களையெல்லாம் தந்தையாரிடமிருந்து கற்றுக் கொண்டார். 'தம்மிற்றம் மக்கள் அறிவுடைமை' என்றாங்கு

வாணிகத்தில் தந்தையினும் மிக்க செல்வாக்கைப் பெற்றிருந்தார். விற்பனைக் கணக்குகளை அன்றன்றே பேரேடுகளில் எழுதி முடித்து விடுவார். கணக்குகளில் எப்போதும் கணக்காகவே இருப்பார். இவர்தம் கணக்கு தணிக்கையாளர்களுக்குத் தணியாத தலை வலியைத் தருவதில்லை. கணக்கு வைத்திருக்கும் இவரது ஒழுங்கு கண்டு அவர்களே வியந்துநிற்பர்.

### முத்தமிழ் வித்தகர்

இளமையில் நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் ஐயா அவர்களிடமிருந்து இலக்கியம் கற்றார். உண்ணியூர் சபாபதி முதலியாரிடமிருந்து இலக்கணப் பயிற்சி பெற்றார். மறைமலையடி களாரும், திரு. வி. க. அவர்களும் இவருக்குத் தனித்தமிழ்ப் பற்றை ஊட்டினர். இசை நுட்பத்தைத் திருவனந்தபுரம் தி. இலக்குமண பிள்ளையிடமிருந்தும், நடிப்புப்பற்றிக் காளி நட்டுவனாரிடமிருந்தும் கற்றுக்கொண்டார்.

### இந்தி எதிர்ப்பும், சீர்திருத்தப் பணியும்

இவர் பங்குகொண்ட போராட்டங்களில் இந்தி எதிர்ப்பே முதன்மை வாய்ந்தது. தமிழகத்தின் இரண்டாவது இந்தி எதிர்ப்புப் போராட்டக் குழுவின் செயலாளராக இருந்து பணி யாற்றிய பெருமை இவருக்குண்டு இந்தியை எதிர்த்து அறிக்கை வெளியிட்டதால் இவருக்கு ஆறுமாதச் சிறைத் தண்டனையும், ஆயிரம் உருபா தண்டமும் விதிக்கப்பட்டன.

இவர் பல கலப்புமணங்களை நடத்திவைத்துள்ளார். தன்மான இயக்கக் கருத்துக்கள் பரவுவதற்கு ஒரு தாளிகை வேண்டு மென்று கருதிக் காரைக்குடி திரு. சொ. முருகப்பா அவர்களை ஆசிரியராகக் கொண்டு திருச்சியிலிருந்து ‘சண்டமாருதம்’ என்ற நாளிதழ் நடைபெற்றுவரப் பெரிதும் உதவினார்.

வள்ளலாரின் பொதுமை நெறியைப் பரப்புவதற்காக முன்னாள் முதல்வர் திரு. ஓ. பி. இராமசாமி ரெட்டியாருக்கு உறுதுணையா யிருந்து பல்லாண்டுகள் பணிபுரிந்துவந்தார். இவரது பணியை இப்போது பொள்ளாச்சி வள்ளல் திரு. நா. மகாலிங்கம் அவர்கள் ஏற்றுத் தொடர்ந்து நடாத்தி வருகின்றார்கள்.

### வியந்து போற்றத்தக்க பண்பாளர்

முத்தமிழ் வித்தகரின் பல பண்புகளை நினைக்குந்தோறும் வியப்பே மேலிடுகிறது! கல்லூரியில் படிப்பதற்காகக் காலடி

எடுத்து வைக்காத இப் பெருமகனாரைச் சொற்பொழிவு செய்யுமாறு விரும்பியழைக்காத கல்லூரிகளே இல்லை எனலாம். கல்லூரிப் பட்டம் எதனையும் பெறாத இவருக்கு மதுரை—காமராசர் பல்கலைக் கழகம் 'டாக்டர்' பட்டம் கொடுத்து அப் பட்டத்திற்குப் பெருமை தேடித் தந்து தானும் பெருமிதங் கொண்டது.

தமிழக ஆளுநர் அவர்களால் கோவை வேளாண்மைப் பல்கலைக் கழகத்திற்கு ஆட்சிக்குழு உறுப்பினராகப் பணியமர்த்தம் செய்யப்பெற்ற காலங்களில் சில துறைகளில் தமிழை அரியணை யேற்றிய பெருமை இவருக்குண்டு. அப் பல்கலைக் கழகம் இப்போது தமிழுணர்வு ததும்பும் பல்கலைக் கழகமாக விளங்குவதற்கு வித்திட்டவர் நம் விசுவநாதம் அவர்களே யாவர்.

10—6—59இல் 'ஆகாசவாணி ஒழிக, வானொலி வாழ்க' என்று குடும்பத்தினருடன் சென்று திருச்சி வானொலி நிலையத்தின் முன்பு முழக்கமிட்டுப் போராடினார். 21—6—59இல் 'ஆகாஸ வாணி' என்ற பெயர்ப்பலகையில் பொறிக்கப்பட்டிருந்த சொற்களைத் தார் பூசி அழித்தார். அதனால் இரண்டு கிழமைகள் சிறைத் தண்டனை பெற்றார்.

முத்தமிழுள் இசை, நாடகத் தமிழ் நூல்கள் எத்துணையோ தோன்றி மறைந்துவிட்டதைக் குறிப்பால் உணர்த்துவதுபோல இவர்தம் முதல் இரு துணைவியரும் அடுத்தடுத்து இவ்வுலகைத் துறந்தேகி விட்டனர்! இயல் போன்ற துணைவியார் (திருவாட்டி சுப்புலட்சுமி அவர்கள்) முத்தமிழ்க் காவலருக்கு இயலுந் துணை புரிந்து வருகின்றார். இவர்களுக்கு மூன்று புதல்வர்கள் பொலிவுற்றுள்ளனர்.

இவர் இதுவரை வெளியிட்டுள்ள பத்தொன்பது நூல்களுள் 'தமிழ் மருந்துகள்', 'அறிவுக்கு உணவு' என்ற இரு நூல்களும் பதினெட்டுப் பதிப்புக்களைப் பெற்றுத் தமிழ்நூல்களின் வெளியீட்டில் ஒரு 'சாதனை'யை ஏற்படுத்தியுள்ளன.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்துவரும் இப் பெருமகனாரைக் கடந்த ஐம்பத்தைந்து ஆண்டுகளாகத் தமிழுணர்வை வளர்த்து வரும் இச் 'செந்தமிழ்ச் செல்வி' தமிழ்த் தாயாக நின்று, பெற்ற ஞான்றினும் பெரிதுவந்து, பல்புகழ்ச் செல்வராகப் பல்லாண்டு காலம் வாழ்ந்து ஊழிதோறும் உறுபுகழ் பெறுக என மனமகிழ்ந்து வாழ்த்துகின்றாள்.

—மு. சதாசிவம்

———

# ஆட்சிமொழித் துணுக்குகள்

[கோ. முத்துப் பிள்ளை]

## 1. AUTOGRAPH

பல்வேறு துறைகளில் சிறந்து விளங்கும் பெரியோரிடம் கையெழுத்து வாங்குவதில் மாணவர்கள் பேரார்வம் உடையவர்களாக விளங்குகின்றனர். கையெழுத்து வாங்குவதற்கென்றே கடைகளில் விற்கப்படும் எழில்மிகு குறிப்பேடுகளை வாங்குவதில் தனிக்கவனம் செலுத்துகின்றனர். அவை அதிக விலையாக இருந்தாலும் அவர்கள் அயர்ந்து போவதில்லை. விலையேற்றம் எவ்வாறு இருந்தபோதிலும், அஃது அவர்களுக்கு ஒரு தடையாக அமைவதில்லை. கையெழுத்து வேட்டையைக் கற்றறிந்தவர்களிடம் நடத்துவதைவிடக் கலைஞர்களிடந்தான் மிகுதியாக நடத்துகின்றனர். அதிலும் திரைப்படக் கலைஞர்கள்தாம் அவர்களுக்குத் தித்திப்பானவர்கள் !

Autograph—என்னும் ஆங்கிலச் சொல்லிற்கு நல்லதொரு தமிழாக்கம் தேவையன்றோ ? Autobiography — என்னும் சொல்லை நாம் 'தன் வரலாறு' என்று மொழிபெயர்க்கின்றோம். Autograph என்பதும் 'தன் கையெழுத்து' என்றுதான் ஆகும். ஆனால், ஈண்டுக் குறிப்பிடும் நோக்கத்திற்கு, அது கவர்ச்சியில்லாமல் போய்விடும். இதைக் 'கையெழுத்து' என்று சொல்வதைவிடக் 'கையொப்பம்' என்று சொல்வதுதான் பொருத்தமாகும்

Handwriting—கையெழுத்து.

Signature—கையொப்பம்.

அதிகமாகப் படித்தவர்களும், அரை குறையாகப் படித்தவர்களும் புரியாத கையொப்பங்களைப் போட்டுத் தருவார்கள். இரண்டுமே கிறுக்கல்களாகத்தாம் இருக்கும். Autograph கையொப்பங்கள் பெரும்பாலும் இந்த வகையிலேதான் அமைந்திருக்கும். ஆயினும் அந்தக் கிறுக்கல்களிலும் அன்பு இழைகளின் பெருக்கல்களைக் காணலாம்.

Autograph—என்றால் 'தன் கையொப்பம்' என்று சொல்லலாமா ? என்பதுதான் இப்போது எழுகின்ற வினாவாகும். 'கையொப்பம்' என்னும் சொல்லை 'ஒப்பம்' என்று சுருக்கிவிடலாம். இவ்வாறு சுருக்குவதைப் பல்வேறு ஆவணங்களில் நாம் கண்டு

வருகின்றோம், 'தன் கையொப்பம்' இட்டுத் தருபவர்கள், வாழ்த்து ஒன்றையும் இணைத்து அதனடியில் 'கையொப்பம்' இடுவார்கள். வாகான வாழ்த்துச் செய்தி எழுதுவதற்குச் சிலர்க்கு நேரம் இருப்பதில்லை. வெறுங் கையொப்பம் மட்டும் இட்டு விட்டு, எட்டி நடந்துவிடுவார்கள்! அவ்வாறு வெறுங் கையொப்பம் மட்டுமே இட்டுத் தந்தாலுங்கூட அதுவும் வாழ்த்துத் தான். ஆகவே 'வாழ்த்துக் கையொப்பம்' என்பது மிகவும் பொருத்தமாக இருக்குமென்று தெரிந்துகொள்ளலாம். Initials என்பதற்குச் 'சுருக்கொப்பம்' என்று சொல்கின்றோம்.

Authentication—என்பதை 'உறுதியொப்பம்' என்று வழங்கு கின்றோம். இதே முறையில் Autograph என்னும் சொல்லிற்கு 'வாழ்த்தொப்பம்' என்னும் மொழிபெயர்ப்பு ஏற்ற மொழிபெயர்ப் பாகவும் இனிய மொழிபெயர்ப்பாகவும் இருக்குமென்று கருது கின்றேன்.

Autograph—வாழ்த்துக் கையொப்பம்.
வாழ்த் தொப்பம்.

---

## வேர்ப்பொருள் மறையாமை

"எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே." என்று சொல்லக்கூடிய மொழி, இவ்வுலகில் தமிழ் ஒன்றே. அது செந்தமிழ் வரம்பில் நிற்பதால், அது தோன்றி ஐம்பதினாயிரம் ஆண்டுகளாயினும், ஆயிரக்கணக்கான அடிச்சொற்களும் இணைப்புச் சொற்களும் இறந்துபட்டும், இன்னும் அதன் பெரும்பாற் சொற்கள் வேர்ப்பொருள் காட்டி நிற்கின்றன. பிறமொழிகளெல்லாம் திரிமொழிகளாதலால், அவற்றின் சொற்கட்கு வேர்ப்பொருளும் மூலமும் தெரியாது. வட மொழியார் வடசொற்களை இடுகுறி காரணியக்குறி என இருவகையாய்ப் பிரித்ததோடு, மேலையரும் எல்லா மொழி களும் இடுகுறிச் சொற்றொகுதிகளே என்று முடிவுசெய்து, அவ்வடிப்படையில் வண்ணனை மொழிநூலையும் தோற்றி வளர்த்து வருகின்றனர்.

சொல் இயனிலையில் மூலப்பொருள் காட்டுவதையும் திரி நிலையிற் காட்டாமையையும், கீழ்வரும் எடுத்துக்காட்டிற் காண்க:

| இயனிலை | திரிநிலை |
|---|---|
| இடைகழி | டேகழி - டேழி - ரேழி (கொச்சை) |
| | டேகழி - தேகலீ(வ) |

—மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர்.

# 'வல்லிறு மொழிகள்''

[புலவர் இரா. கிருட்டிணன் (இராகி) பி. லிட்.]

ஒல்காப் பெரும் புகழ்த் [1]"தொல்காப்பியத்திற்கு உரை வகுத்த ஆசிரியர்கள்; இளம்பூரணர், பேராசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடர் என்பவர்கள். இவர்கள் இயற்றிய உரைகளுள், ஒருவரோடொருவர் மாறுபடும் உரைகளைக் காணலாம்.''

அவ்வறுவரின் உரைகளைக் கூர்ந்து நோக்கி, ஆய்ந்து பார்த்த பிற்காலப் பேராசிரியர் பலர் சிற்சில நூற்பாக்களுக்கு ஆய்வுரை வழங்கியிருப்பதை அறிஞர் பலர் அறிவர். இதனால், முற்கால உரையாசிரியர்களைக் குறை கூறுவதாக எண்ணுவது ஏற்புடைத்தன்று.

'ஆனைக்கும் அடி சறுக்கும்' என்னும் பழமொழியையும்,

[2]"அரியகற் றாசற்றார் கண்ணும் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு''

என்று வள்ளுவர் கூறியதையும் உளங்கொண்டு, உண்மையைக் காண ஆய்வது நன்மையைப் பயக்கும்.

தொல்காப்பிய உரையாசிரியர்கள், சிற்சில இடங்களில் ஏற்ற எடுத்துக்காட்டுகளைக் காட்ட இயலாதவிடத்து, "அவை இக் காலத்து வழக்கிழந்தன போலும், வந்தவழிக் கண்டுகொள்க.'' என்று நயமாகவும் நாகரிகமாகவும் கூறியுள்ளார்கள். ஆனால், அப்படிப்பட்டவர்களும் 'மயக்கமாக' எழுதியுள்ளார்கள் என்பதை நோக்கும்போது வியப்பாக வுள்ளது. அம் மயக்கம் தீர்க்கும் மருந்தையும் ஆய்ந்து அறிய வேண்டியுள்ளது.

தொல்காப்பியர், எழுத்ததிகார மொழி மரபில், [3]'மொழியீறும் மெய்கள்' பதினொன்று எனத் தொகுத்துக் கூறி, அவற்றுள் மூன்று மெய்களை மட்டும் விதந்து கூறியுள்ளார்.

[4]'நகர மெய் இருமொழிக்கு ஈறாகும்' என்றும், [5]'ஞகர மெய் ஒரு மொழிக்கு ஈறாகும்' என்றும், [6]'வகரமெய் நான்கு மொழிக்கு ஈறாகும்' என்றும் விதி வகுத்துள்ளார்.

---

1. 'தமிழ் அன்றும் இன்றும்' திரு. மே. வீ வே. பக் : 28.

2. குறள் : 503.

3 முதல் 6 வரை : தொல் - எழுத் - நச் - நூற்பா முறையே 78 முதல் 81 வரை (கழகப்பதிப்பு : '61).

நகர மெய், இரு மொழிக்கு ஈறுவதைப் 'பொருந், வெரிந்' என்றும்; ஞகர மெய், ஒரு மொழிக்கு ஈறுவதை 'உரிஞ்' என்றும் உரையாசிரியர்கள் எடுத்துக்காட்டியுள்ளார்கள்.

நகர மெய்க்கும் ஞகர மெய்க்கும் 'மாட்டேற்று' முறையான் விதி கூறிய தொல்காப்பியர்; வகர மெய் ஈறுவதைத் 'தனி' நூற்பா வில் கூறியுள்ளார். நம் ஆய்வுக்குரிய பகுதியும் இதுவே.

"வகரக் கிளவி நான்மொழி ஈற்றது'' என்பது நூற்பா. இந் நூற்பாவுக்கு 'அவ், இவ், உவ், தெவ்' என்னும் நான்கனை எடுத்துக் காட்டியுள்ளனர். (உரையாசிரியர்) ஈண்டு,' எவ்' ஏன் கூறவில்லை? என்று வினு எழுதல் இயல்பே! தொல்காப்பியர்; [7]"ஆ, ஏ, ஓ அம் மூன்றும் வினு'' என்று கூறியிருப்பதால், எகர வினு கொள்ளப்படுவதன்று! என்று தள்ளப்படுவதும் ஏற்புடைத் தன்று. [8]"எகர முதல் வினுவின் இகர இறுதியும்'', என்றும், [9]"சுட்டு முதல் வயினும் எகர முதல் வயினும்'', என்றும் தொல் காப்பியரே எழுத்ததிகாரத்துள் கூறியிருப்பதும்; [10]"உயர்திணைக் கண் யார் எனவும் அஃறிணைக்கண் எவன் எனவும் வினுவினைக் குறிப்பாக வருவனவற்றைச் சொல்லதிகாரத்துள் கூறிப்போந்தார்'' என்று திரு வெள்ளைவாரணர் கூறுவதும் ஈண்டு எண்ணத்தக்கது. எனவே, எடுத்துக்காட்டில் எப்படியோ மயக்கம் ஏற்பட்டுள்ளது எனலாம்.

நகர ஒற்றுக்கும் ஞகர ஒற்றுக்கும் முறையே எடுத்துக்காட்டிய 'பொருந், வெரிந், உரிஞ்' என்பன ஒவ்வொன்றும் ஒரு சொல் தன்மையாய் உள்ளன. வகர வீற்றிற்குத் 'தெவ்' மட்டுமே ஒரு சொல் தன்மையாய் உள்ளது. ஏனையவை அவ்வாறு இல்லை.

அவ், இவ், உவ் இம் மூன்றனையும் தொல்காப்பியர், [11]"சுட்டு முதல் வகரம்'' என்றே கூறியுள்ளார். நன்னூலார், [12]"வவ்விறு சுட்டு'' என்று குறிப்பிடுவார்.

சுட்டு முதல் வகரத்தைத் தனியே பிரித்தறிவதற்காக 'வவ்விறு மொழி'களில் வரும் வகரத்தை [13]"ஏனை வகரம்'' என்றே தொல்காப்பியர் கூறியுள்ளார்.

---

7. தொல் - எழுத் - நச் - நூற்பா : 32.
8, 9. முறையே ,, ,, ,, : 159, 334.
10. தொல்காப்பியம் நன்னூல் எழுத்ததிகாரம். பக் : 60.
11. தொல் - எழுத் - நச் - நூ : 183, 378.
12. நன்னூல். நூ : 250.
13. தொல் - எழுத் - நச் - நூ : 184, 382.

நூற்பாவிலும், 'கிளவி, மொழி' என ஈரிடங்களில் கூறியிருப்பதும் கூர்ந்து நோக்கத்தக்கது.

'தெவ்' என்னும் சொல்லைத் தொல்காப்பியரே; [14]"தெவ்வுப் பகையாகும்" என்று சொல்லதிகாரத்துள் கூறியிருப்பதுபோலச் 'சுட்டு முதல் வகரத்தை' (வவ்விறு சுட்டு) யாண்டும் சொல்லாகக் கொள்ளவில்லை. இவற்றையெல்லாம் உற்று நோக்கின், 'தெவ்' வைப்போலவே 'வவ்விறு மொழிகள்' வேறு இருத்தல் வேண்டும், என்பது பெறப்படும். இதற்கு, அகச் சான்றுகளும் புறச்சான்றுகளும் கண்டு தெளிவது நம் கடமையாகும்.

முதற்கண் அகச்சான்ருகத் தொல்காப்பியத்தையே ஆய்வோம்.

## 'தவ்'

[15]"முதலி ரெண்ணின்முன் உயிர்வரு காலைத்
'தவ'லென மொழிப உகரக் கிளவி
முதனிலை நீட லாவயி னான."

என்ருர் தொல்காப்பியர். இந் நூற்பாவில்; இரண்டாம் அடியின் முதலிலேயே 'தவலென' என்று வந்திருப்பது நோக்கத்தக்கது. 'தவ்' என்னும் முதனிலை 'அல்' என்னும் தொழிற்பெயர் விகுதி பெற்றுத் (தவ்+அல்) 'தவல்' என்ருயிற்று. நச்சினுர்க்கினியர், 'தவல்' என்பதற்குக் 'கெடுதல்' என்று பொருள் கூறியிருப்பதும் ஈண்டு நினைவில் இருத்தத்தக்கது.

[16]"'தவ'லருஞ் சிறப்பினத் தன்மை நாடின்"

என்றும்;

*"முதலொடு புணர்ந்த யாழோர் மேன
"தவ"லருஞ் சிறப்பின் ஐந்நிலம் பெறுமே"

என்றும் மீண்டும் மீண்டும் ஆண்டுள்ளார். ஈண்டும் 'கெடுதல்' என்பதே பொருளாம். எனவே, 'தெவ்' என்பதைப் போலவே 'தவ்' என்பதும் சொல் என்பது பெறப்படும்.

---

14. தொல் - சொல் - நச் - நூ : 346.
15. தொல் - எழுத் - நச் - நூற்பா : 455.
16. தொல் - பொருள் - உவ - பேரா - நூ : 300.
* தொல் - பொருள் - களவு. நச் - நூ : 106.

புறச்சான்று: இன்றுவரை கிட்டியுள்ள தமிழ்நூல்களுள் காலத்தால் முற்பட்டது தொல்காப்பியமேயாதலால், தொல் காப்பியத்திற்குப் பின்னர்த் தோன்றிய நூல்களிலேயே புறச் சான்றுகளைக் காணவேண்டியுள்ளது.

[17]"முள்ளரை யிலவத் தொள்ளிணர் வான்பூ
முழங்க லசைவளி யெடுப்ப வானத்து
உருமுப்படு கனலி னிருநிலத் துறைக்குங்
கவலை யருஞ்சுரம் போயினர்
தவலில் அருநோய் தலைத்தந் தோரே"

என்பது, ஓதலாந்தையாரின் ஐங்குறுநூற்றுப்பாடல். "இது தலைமகன் பிரிந்துழிச் சுரத்து வெம்மை நினைந்து தலைமகள் சொல்லியதாம்."

இப் பாடலின் ஈற்றடியில், 'தவலில்' என்று வந்திருப்பது ஆய்வுக்குரியது. 'தவ்+அல்+இல்'='தவலில்' என்றுயிற்று. எனவே, முதனிலை 'தவ்' என்பதேயாகும். பொருளும், 'கெடு-தல்' (இல்லாத அருமையான நோய்) என்று கொள்ளப்படுத லால் ஐயப்படுதற்கு இடமில்லை.

[18]"தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார்
இகலில ரெஃகுடையார் தம்முட் குழீஇ
நகலி னினிதாயிற் காண்பா மகல்வானத்து
உம்பர் உறைவார் பதி"

என்பர் நாலடியார்.

[19]"தவ்"வென்னுந் தன்மை இழந்து"

என்று முடியும் குறட்பாவில் 'தவ்' என்று முதல் நிலையே ஆளப் பட்டுள்ளது. இதற்கு உரை எழுதிய பரிமேலழகர்; 'தவ்' வென்னும் என்பதற்குச் 'சுருங்கும்' என்று கூறியுள்ளார். சுருங்குதலும் கெடுதலோடு ஒக்குமன்றே?

[20]"உவமை என்னும் தவலருங் கூத்தி
பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து

17. ஐங்குறுநூறு. செலவுப் பத்து: 425 (சங்க இலக்கியம் முதற்பகுதி. பாரி நிலையம்)

18. நாலடியார்: 137.

19. திருக்குறள்: 1144.

20. சித்திர மீமாஞ்சை. அப்பைய தீட்சதர்.

காப்பிய அரங்கில் கவினுறத் தோன்றி
யாப்பறி புலவர் இதயம்
நீப்பறு மகிழ்ச்சி பூப்ப நடிக்குமே.”

என்றார் அப்பையர். *‘தவலருஞ் செய்வினை...’ என்கிறது கலி.

‘தவ்’ என்பது வினைச் சொல்லாதலால் தொழிற்பெயர் விகுதி பெற்றும், பெருதும் முதனிலை நீண்ட (திரிந்த) தொழிற் பெயராக வருதலுமுண்டு. †‘தாவில் நன்மொழி...’ என்றார் காப்பியர்.

[21]“தாவில் தாணிழற் றவிர்ந்தன்று லுலகே”

என்பது அகம்.

தவ்+இல்=தாவில் என்றாயிற்று.

[22]“தாவா நல்லறம் செய்திலர் அதனால்...”

என்பது சிலம்பு.

தவ்+ஆ=‘தாவா’ என்றாயிற்று. (ஆ=எதிர்மறை)

[23]“தாவில் சீர்க் கழுமலத்தான்...”

என்றும்,

[24]“தாவாத புகழ்...”

என்றும், பெரிய புராணத்துள் ஆளப்பட்டிருப்பதும் நோக்கத் தக்கது. (தொடரும்)

* கலித்தொகை : 19. † தொல் - பொ - களவு - நூ : 22.
21. அகநானூறு : 1. பாரதம் பாடிய பெருந்தேவனார்.
22. சிலப்பதிகாரம். வரந்தரு காதை. அடி : 125.
23. சம்பந்தமூர்த்தி நாய - புரா - பாடல் : 691.
24. கலிக்காம நாய - புரா - பாடல் : 125.

———

## கற்றலும், நிற்றலும்

தெரிந்துகொள்ளுதல், தெரிந்தபடி பழகுதல் என்னும் இரண்டனையும் ‘கற்க’ ‘நிற்க’ என்று திருவள்ளுவர் சுருக்கமாக எவ்வளவு தெரிப்பாக மொழிந்துவிட்டார்!

அழகரடிகள்

# பேராசிரியர் மறை. திருநாவுக்கரசு அவர்களின் பவள விழா

தனித்தமிழ்த் தந்தையார் மறைமலையடிகளாரின் திருமகனார் உயர் திரு. மறை. திருநாவுக்கரசு அவர்களின் பவள விழா (75 ஆம் ஆண்டு நிறைவு விழா) 23—8—81 அன்று மாலை சென்னை பெரம்பூர் அன்ன தான சமாசத்தில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. ஆட்சிமொழிக் காவலர் உயர்திரு. கீ. இராமலிங்கனார் விழாவிற்குத் தலைமை ஏற்றார். தமிழக அரசின் மேலவைத் தலைவர் டாக்டர் ம. பொ. சிவஞானம், மறை. திருநாவுக்கரசு அவர்களுக்குத் தமிழரசுக் கழகச் சார்பில் பொன்னாடை போர்த்திப் பாராட்டினார். சென்னைப் பல்கலைக் கழக முன்னாள் துணை வேந்தர் திரு. கெ. தி. சுந்தரவடிவேலு, 'தென்மொழி' ஆசிரியர் பாவலர் 'பெருஞ்சித்திரனார். திருவாளர்கள் ச. சிவகுமாரன், ந. ரா. முருகவேள், கோ. முத்துப் பிள்ளை, நாரண துரைக்கண்ணன், புரிசை முருகேச முதலியார், வ. சேதுராமன், செயசந்திரன் மற்றும் பெரு மக்கள் பலர் பாராட்டுரை வழங்கினர்.

மறை. திருநாவுக்கரசு அவர்கள் மறைமலையடிகளார்க்கும் சவுந்தர வல்லி அம்மையார்க்கும் நன்மகனாராக 21—8—1907 இல் தோன்றினார். இளமையில் தம் தந்தையாரிடமே இலக்கண இலக்கியங்களைக் கற்கத் தொடங்கிப், பின்னர் திருவையாறு அரசர் கல்லூரியில் 1926 முதல் 1932 ஆம் ஆண்டு வரையில் தமிழ் பயின்று வித்துவான் பட்டம் பெற்றார். இவருக்குத் தாய்மொழிப்பற்று மட்டுமின்றி நாட்டுப்பற்றும் மிகுதி. காந்தியடிகளாரிடத்தும் காங்கிரசுக் கட்சியிடத்தும் பற்றுக் கொண்டு கதராடையே உடுத்திவரலானார். 1932 முதல் 1938 ஆம் ஆண்டுவரை சென்னை நுங்கம்பாக்கம் நகராண்மைக் கழக உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றினார். 1938 இல் கட்டாய இந்தியை எதிர்த்துத் தம் ஆசிரியப் பணியைத் துறந்து இந்தி எதிர்ப்புப் போரில் ஈடுபட்டார். அங்ஙனமே 1941 இல் நாட்டு விடுதலைப் போரில் ஈடுபட்டு ஓராண்டுக் காலம் சிறைப்பட்டிருந்தார். பின்னர் நாடெங்கும் சுற்றிச் சமயத் தொண்டில் ஈடுபட்டார். மீண்டும் 1948 முதல் ஆசிரியப் பணியில் ஈடுபட்டார். 1952 முதல் தூத்துக்குடி வ. உ. சி. கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி இப்போது ஓய்வு பெற்றுள்ளார். 1977 இல் இவர்தம் மனைவியார் மறைந்தார். இவருக்கு ஆண்மக்கள் ஐவரும், பெண்மக்கள் இருவரும் உளர்.

இவர் பெரியபுராணத்தை ஆய்வு செய்து நான்கு தொகுதிகளாக வெளியிட்டுள்ளார். இவர் எழுதிய 'மறைமலையடிகளார் வரலாறு' மிக விரிவானதும் விளக்கமானதுமாகும். பவள விழாக் கண்ட இப் பேரா சிரியர் முத்து விழா, நூற்றாண்டு விழா எனப் பல விழாக்கள் கண்டு நீடினிது வாழ இறைவன் அருள்புரிவானாக.

---

# செய்திகளும் குறிப்புக்களும்

## டி. கே. சி.யின் இல்லம் நினைவுச் சின்னமாகும்

23—8—81 அன்று குற்றாலத்தில், டி. கே. சி. நூற்றாண்டு விழா நடைபெற்றது. மாண்புமிகு அமைச்சர் இராம. வீரப்பன் அவர்கள் விழைவுரை ஆற்றினார். அவர்தம் உரையில், குற்றாலம் ஐந்தருவிச் சாலையிலுள்ள டி. கே. சி.யின் இல்லம் நினைவுச் சின்னமாக்கப்படும் என்றார். மாலை நிகழ்ச்சிக்கு முன்னாள் தலைமை நீதிபதி திரு. எம். எம். இசுமாயில் அவர்கள் தலைமை தாங்கிச் சிறந்ததோர் உரையாற்றினார். அமைச்சர் வீரப்பன் டி. கே. சி.யின் சிலையினைத் திறந்துவைத்தார். விழா மலரைத் திரு. இசுமாயில் அவர்கள் வெளியிட்டார் இவ் விழாவினை யொட்டிக் கவியரங்கம், கருத்தரங்கம் முதலியனவும் நடைபெற்றன.

## முதுபெரும் புலவர் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்களின் 86ஆம் பிறந்தநாள் விழா

முதுபெரும் புலவரும், இலக்கணத் தாத்தா எனப் போற்றப் பெறுபவருமான மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்களின் 86ஆவது பிறந்தநாள் விழா 31—8—81 அன்று புரசை, கங்காதீசுவரர் கோயில் தெருவிலுள்ள மாநகராட்சி உயர்நிலைப்பள்ளியில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. வித்துவான் பெ. கோவிந்தசாமி அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார். பேராசிரியர் அ. கி. பரந்தாமனார் அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினார். டாக்டர் தெ. ஞானசுந்தரம், புலவர் ச. சீனிவாசன், எம்.ஏ., ஆகியோர் பாராட்டுரை வழங்குமுகத்தான் அரிய இலக்கணச் சொற்பொழிவாற்றினர். முதுபெரும் புலவர் மே. வீ. வே. அவர்கள் இறுதியில் அன்புரை வழங்கினார். வித்துவான் ஆ. பா. வீரராகவன் அவர்கள் நன்றி நவில விழா இனிது நிறைவேறிற்று. திரு. மே. வீ. வே. அவர்கட்கு எம்முடைய வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## புலவர் நெல்லை ஆ. கணபதிக்கு நல்லாசிரியர் விருது

முன்னாள் குடியரசுத் தலைவர் எஸ். இராதா கிருட்டிணன் அவர்களின் நினைவாக ஆண்டுதோறும் செப்டம்பர் 5 ஆம் நாளில் வழங்கப் பெறும் நல்லாசிரியர் விருதினை, இவ்வாண்டு நெல்லைப் புலவர் ஆ. கணபதி பெற்றார். இவர் 25 ஆண்டுகள் கல்விப் பணியாற்றியுள்ளார். பல இதழ்களில் கட்டுரைகளும் கவிதைகளும் எழுதி வருகிறார் என்பதும், வானொலி, தொலைக்காட்சி நிகழ்ச்சிகளிலும் பங்குகொள்கிறார் என்பனவும் குறிப்பிடத் தக்கவை.

## கொற்கைத் தமிழ் மன்ற நான்காம் ஆண்டு நிறைவு விழா

கொற்கைத் தமிழ்மன்றத்தின் 4 ஆம் ஆண்டு நிறைவு விழா, ஏரலில் முறையே ஆக டுத் திங்கள் 7, 8, 9 ஆம் நாள்களில், கடலூர் முதுபெரும் புலவர் அ. நடேச முதலியார் முன்னிலையில், கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா இளங்குமரன் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. அறிஞர் பலர் உரையாற்றினர்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு, ருடு—ருடுகூஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. | வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10—00 |
| ,, | ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5—00 |
| ,, | A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5—00 |
| ,, | கோபாலகிருட்டிணன், சிங்கப்பூர் | 100—00 |
| திருமதி | இரா. தமிழரசி, சென்னை-20 | 15—00 |
| ,, | வே. சீதாலட்சுமி ,, | 15—00 |
| உயர்திரு. | கு. குழந்தை யேசு, திருப்பத்தூர் | 10—00 |
| ,, | சிவ. கோபாலசுவாமி, சென்னை-21 | 10—00 |

———

# மதிப்புரை

### கள்ளத் தோணி

[ஆசிரியர்: கே. ஏ. அப்பாஸ். கலைவாணி புத்தகாலயம், 435, டாக்டர் ஏ. ஆர் எம். ரோடு, கே.கே. நகர் சென்னை-78. விலை: ரூ. 10-90]

பொதுவாகத் தமிழ் நாடகங்கள், கற்பனை கலந்த கதைகளை இயல் இசை கூத்து என்னும் முத்தமிழ்ச் சுவை கலந்து, பொழுது போக்கிற்காகப் படித்தற்கும் நடித்தற்கும் ஏற்பவே எழுதப்படுவது வழக்கம். ஆனால் இந்தக் 'கள்ளத்தோணி', ஒரு காலத்தில் கலஞ் செலுத்திக் கடலாட்சி புரிந்து வாழ்ந்த தமிழினம் இன்று வீழ்ச்சி யடைந்து அயல் நாடுகளில் அல்லற்படும் நிலையினைச் சித்திரித்துக் காட்டும் நல்ல - பயனுள்ள நாடகமாக அமைந்திருப்பது பெரிதும் பாராட்டற்குரியது.

இலங்கையில் தமிழர்கள் கொடுமைக்குள்ளாகும் இந்த நேரத்தில், இந்த நாடகத்தைப் படிப்போர் அயல் நாட்டுத் தமிழனின் அவல நிலையினை அறிந்துகொள்ள நல்ல வாய்ப்பாகும். பேரறிஞர் அண்ணா, மற்றுமுள்ள தமிழகத்தின் தலைவர்கள் பலரின் பாராட்டுரைகளைப் பெற்றிருக்கிறது இந்நாடகம் எனில் நாம் அதிகம் கூறத் தேவையில்லை.

### திருமகள் அந்தாதி

[ஆசிரியர்: ஸ்ரீ சுத்த சத்வானந்தா (என். எஸ். சிதம்பரம்) 14, சிங்காரி நாயக்கன் தெரு, மயிலாப்பூர் சென்னை-4.]

செல்வம் தந்திடும் கடவுளெனத் துதிக்கப்பெறும் திருமகள்மீது பாடப்பெற்றிருக்கும் இவ் வந்தாதி நூல் கவி நயம் பொதுள, கருத்து வளமும், கற்பனை நயமும் கூடிப் பக்திச் சுவையூட்ட வல்லதாய் அமைந்துள்ளது. நூலின் பிற்பகுதியில் இசைப் பாடல்களும் சேர்க்கப் பெற்றுள்ளன. திருமகள் அருள் பெற விழைவோர் படிக்க வேண்டிய நூல்.

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பா அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிட்.

# தமிழன்பர்களுக்கு ஒரு வேண்டுகோள்

'செந்தமிழ்ச் செல்வி' மொழித்துறையிலும், ஆராய்ச்சித்துறையிலும் அறிஞர்கட்குப் பயன்படத்தக்க அறிவுக் கருவூலமாகத் திகழும் 'செல்வி' நாட்டில் கல்லூரிகளும், கலைக்கூடங்களும் பல்கிப் பெருகிவரும் இந்நாளில் பல்லாயிரக்கணக்கில் விற்பனையாக வேண்டிய நிலையில் நாம் எதிர்பார்க்குமளவு வளர்ச்சி பெறுமல் தமிழரின் ஆதரவற்ற நிலையில் இருப்பது நற்றமிழ் வல்லார் எண்ணிப் பார்த்து நாணித் தலைகுனிய வேண்டிய செய்தியாகும்.

தாள்விலை ஏற்றம், அச்சுக் கூலி உயர்வு என்றின்ன பிற இடர்ப்பாடுகளுக்கிடையே மற்ற இதழ்களைப்போல் இடைக்கண் முரியாமல், பொருள் இழப்பையும் பொருட்படுத்தாமல் எடுத்த முயற்சியில் பின்வாங்காமல் தொடர் பணி செய்து வருகிறது 'செந்தமிழ்ச் செல்வி'. எனவே, அன்பர்கள் இதனை எண்ணிப் பார்த்து இவ்விதழின் வளர்ச்சிக்குத் தம்மாலான உதவிகளை நல்குவார்கள் என எதிர்பார்க்கிறோம்.

இவ் வேண்டுகோளைக் கண்ணுறும் அன்பர்கள் ஆங்காங்கே – உள்நாட்டிலும் அயல் நாடுகளிலுமுள்ள தமிழ்ப் பற்றுடையோர் இவ்விதழுக்குக் கையொப்பதாரர்களைச் சேர்த்தனுப்பும்படி கேட்டுக்கொள்கிறோம். செல்வர்களாயிருப்போர் வாழ்நாள் உறுப்பினர்களாகிச் செல்வியை வாழ்வாங்கு வாழச் செய்வார்கள் என நம்புகிறோம்.

—ஆசிரியர்

"செந்தமிழ்ச் செல்வி"

ஆண்டுக் கையொப்பம்

(Subscription Rate)

உள்நாடு ரூ. 16 00 வெளிநாடு ரூ. 30 00

வாழ்நாள் கையொப்பம்

உள்நாடு ரூ 150 00 வெளிநாடு ரூ 300 00

---

கைவசமுள்ள 'செந்தமிழ்ச் செல்வி' சிலம்புகள்:

2, 3, 4, 6, 21, 25, 27, 32, 36, 37 42 முதல் 55 வரை

சிலம்பு ஒன்றின் விலை ரூ. 16 - 00

அப்பர் அச்சகம், சென்னை-1.